KALKI 5.1.1992 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு

# கல்கி



"இப்போது மழைவளம் குறைந்து போய் விட்டதால் கீழ்பவானி அணையில் தேங்கும் தண்ணீரில் நாற்பது முதல் நாற்பத்தைந்து டி.எம்.சி. அளவுக்குக் குறைந்து போய் விட்டது. இதோடு திருப்பூருக்குக் குடிநீர் எடுத்துச் செல்லும் திட்டத்தின் மூலம் மேலும் பத்து டி.எம்.சி. தண்ணீர் குறையும். இந்த நிலையில் பாசன நிலங்களின் கதி என்னவாகும் என்பதை அரசு யோசிப்பதாகவே தெரிய

# விவசாயிகள் சங்கம் வழங்கும் விவேகமான யோசனைகள்!

வில்லை'' என்கிறார்கள் கீழ் பவானி பாசன விவசாய சங்கத்தைச் சேர்ந்த செங்கோடு, நல்லசாமி, குமாரசாமி, சென்னியப்பன் ஆகியோர்.

''குடிநீர் என்பது மிகவும் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றல்லவா?'' என்ற போது, ''அதற்கு நாங்கள் எதிரிகளல்ல. இவற்றையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொண்டு, அரசு திட்டங்கள் தீட்ட வேண்டும் என்றுதான் சொல்கிறோம்'' என்று பிரச்னையை விளக்குகிறார்கள்.

''முதலில் பாசனக் கால்வாய்களை மேம்படுத்த வேண்டும். பிறகு தமிழகத்தில் உற்பத்தியாகிக் கேரளாவில் பாய்கிற பாண்டியாறு, புன்னம்புழா நதிகளின் நீரில் 180 டி.எம்.சி. வீணாகச் சென்றுதான் கடலில் கலக்கிறது. அதில் வெறும் 30 டி.எம்.சி. தண்ணீரை நம் பக்கம் திருப்பி விட்டால் போதும். எங்களைப் போன்ற விவசாயிகள் பெரும் பயனடைவோம்'' என்கிறார்கள்.

''இதே போல் கோதாவரி நீரின் என்பது சதம் வீணாகச் சென்று கடலில் தான் கலக்கிறது. அதில் ஒரு பகுதியைத் தமிழகத்திற்குத் திருப்பினால் தமிழகத்தில் இருபது லட்சம் ஏக்கர் பரப்புக்குப் புதிய பாசன வசதி கிடைக்கும் என்பதோடு, ராயலசீமா பகுதியிலும் அறுபது லட்சம் ஏக்கருக்குப் புதிய பாசன வசதி கிடைக்கும்.


விவசாய சங்கத்தினர்

''இப்படி மற்ற மாநில அரசுகளோடு - அந்த மக்களோடு நம்மால் நதி நீரைப் பகிர்ந்து கொள்வது அத்தனை சுலபமா? காவிரிப் பிரச்னையே பெரும் பிரச்னையாக இருக்கிறதே? என்று கேட்கலாம். சுலபமில்லைதான். ஆனால், முடியாததல்ல.

''உதாரணத்திற்கு விந்தியமலையின் தெற்குப் பகுதியிலுள்ள விவசாயிகளை எடுத்துக் கொள்வோம். அனைவருமே நதி நீரைக் கொண்டு பாசனம் செய்பவர்கள் அல்ல. பெரும்பாலோர் பம்ப்செட் வைத்து நிலத்தடி நீரை இறைத்துத்தான் பாசனம் செய்கிறார்கள். குறைந்தபட்சமாக இவர்கள் இருபத்தைந்து லட்சம் மின்சார பம்ப் செட்டுகளை உபயோகிக்கிறார்கள். அதற்குப் பத்தாயிரம் மெகாவாட் மின்சாரம் செலவாகிறது. இந்தப் பத்தாயிரம் மெகாவாட் மின்சாரத்தைத் தயாரிக்கக் குறைந்தபட்சம் பன்னிரண்டாயிரம் கோடி ரூபாய் செலவாகிறது!

''இவற்றோடு ஆயில் பம்ப் செட்டுகள் எத்தனை இயங்குகின்றன என்பதையும் கணக்கிட்டுப் பார்த்தால், மாநில நதிகளை இணைப்பதன் மூலம் ஒவ்வொரு மாநிலத்திற்கும் விவசாயத்திற்காகச் செலவாகும் மின்சாரத்திலும், டீஸலிலும் எவ்வளவு மிச்சமாகும் என்பதை அரசு மக்களிடம் எடுத்துச் சொல்லிப் புரிய வைத்தால், மக்கள் நிச்சயம் அறிவுபூர்வமாகச் சிந்தித்து ஒத்துழைப்பார்கள்!'' என்கிறார்கள் இவர்கள்.

''இவை மட்டுமல்ல; அனைத்திந்திய அளவில் எடுத்துக் கொண்டால், இந்திய நதிகளின் மூலம் கிடைக்கும் 60,900 டி.எம்.சி. தண்ணீரில் இப்போது நாம் வெறும் 9,690 டி.எம்.சி. தண்ணீரை மட்டும் தான் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம். மீதி, யாருக்கும் பயன்படாமல் வீணாகக் கடலில்தான் கலக்கிறது'' என்கிறார்கள்.

இவர்கள் சொல்லுவதைப் பார்த்தால், நதிநீர் மட்டும்தான் ஒவ்வோர் ஆண்டும் வீணாகப் போகிறது என்பதல்ல; ஒவ்வொரு முறையும் நாம் தேர்தலில் போடும் வோட்டும்தான்!

- பிரின்ஸ்

வாசகர்களுக்குப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!



கமல் ரசிகர் மன்றம் : திருமணத்துக்கான செலவுகளை ஏற்கிறது

''அங்கத்தினர்களின் பிளட் குரூப், குறித்து வைத்திருக்கும் எங்களுக்கு, எந்த அவசர சமயத்திலும் ரத்த தானம் செய்து உதவ முடியும். இந்தப் பகுதியில் மரம் நடும் பணியைச் செய்திருக்கிறோம். எழுத்தறிவு இயக்கம் தொடர்பான நாடகம் ஒன்றை இங்கேயுள்ள மேல்நிலைப் பள்ளியில் ஏற்பாடு செய்தோம்....''

'நேரு யூத் கிளப்' நல்லன செய்வது ஒருபுறமிருக்க,

## இளைஞர் சங்கங்கள் :

# ஈரோட்டின் அகல்விளக்குகள்

சிற்றுண்டி சாப்பிடுவதற்காக ஓட்டல் ஒன்றில் நுழைந்து, ஆர்டர் செய்கிறார் ஓர் இளைஞர். தட்டில் இட்லி - வடையைக் கொண்டு வந்து வைக்கும் சிறுவனைப் பார்த்துச் சற்றே துணுக்குறுகிறார்.

''ஏம்பா, படிக்க வேண்டிய வயசில் இங்கே வேலை செய்யறியே? பள்ளிக்கூடம் போய்ப் படிக்க ஆசையில்லையா?'' என்று பரிவுடன் கேட்கிறார்.

''படிக்க ஆசைதான். ஆனா வசதி இல்லையே!'' என்கிறான் சிறுவன்.

''உன் படிப்புச் செலவை நான் ஏற்றுக் கொள்கிறேன். பள்ளிக்கூடம் சென்று படிக்கிறாயா?'' என்று இளைஞர் கேட்டதும், பிரகாசமான முகத்துடன் தலையை அசைக்கிறான் சிறுவன்.

இன்று 'அவ்வை நிலைய'த்தில் நிறைய்ச் சிறுவர்கள் கல்வியறிவு பெறுகிறார்கள்- இளைஞரின் முயற்சிக்குக் கைகொடுக்கும் அன்பர்கள் காரணமாக.

இளைஞரின் பெயர் : சீனிவாசன்.

''எங்கள் நேரு இளைஞர் குழு, அரசியல் சார்பற்றது!'' என்கிறார் எஸ். மகேந்திரன். வீரப்பன் சத்திரம் கங்கை வீதியில் இயங்குகிறது இந்தச் சங்கம்.

''குன்னூர் இம்மானுவேல் கண் மருத்துவமனை டாக்டர்கள் உதவியோடு கண் சிகிச்சை முகாம் நடத்தினோம். முந்நூறுக்கு மேற்பட்டவர்களுக்கு இலவச கண் பரிசோதனையும், ஐம்பது பேருக்கு இலவசமாகக் கண் அறுவைச் சிகிச்சையும் செய்தோம்.

அவர்களைப் பாராட்டி, உதவி, ஒத்துழைக்க முன்வருவோரையும் பாராட்ட வேண்டும்!

''பெரியார் மாவட்டத்திலேயே மிகப் பெரிய, தலைசிறந்த, கலையரங்கம் எது?'' என்று கேட்டால், தயங்காமல் பலரும் தரும் பதில் :

''கொங்கு கலையரங்கம்.''

சம்பத் நகரில், கொங்கு வேளாளர் இளைஞர் சங்கம் கட்டியிருக்கும் இந்தக் கலையரங்கில் திருமணங்கள் மட்டுமல்ல, இசை, நடன, நாடக நிகழ்ச்சிகளும் நடக்கின்றன. மிக நவீன சமையல் கூடம். பிரம்மாண்டமான சாப்பாட்டுக் கூடம்!

கலையரங்கின் வலப்புறம், அபூர்வமான பஞ்சரூப விநாயகர் கோயில்.

தலைவர் கொளந்தசாமியும், செயலர் வேலுசாமியும் பணிகளைச் சுருக்கமாகக் குறிப்பிட்டார்கள் :

வசதி குறைந்த பள்ளி மாணவர்களுக்கு நிதி உதவி; ஏழை எளியோருக்கு மருத்துவ உதவி; அநாதை இல்லங்களுக்குப் பொருளுதவி; கொங்கு அறிவாலயத்துக்கு சின்டெக்ஸ் தண்ணீர்த் தொட்டி; அரசினர் பொது மருத்துவமனைக்கு டைப்ரைட்டர்; ஒவ்வோர் ஆண்டும் பிப்ரவரியில் ரத்த தானம்.

இலவச மருத்துவமையம் துவங்கும் திட்டமும் இருக்கிறதாம். வாழ்த்துகிறோம்!

கமல் 'ரசிகர் மன்றங்கள்', நற்பணி இயக்கங்களாக மாறியிருப்பதில் வியப்பே இல்லை.

மாணவ - மாணவிகளுக்கு இலவசக் கல்விக் கருவிகள் உதவி; மாவட்டக் குடும்பநலச் செயலகத்துடன் இணைந்து சுகாதார முகாம்; நீரிழிவு நோய் பற்றிய விளக்கக் குறிப்பு வெளியீடு; மதுரை அரவிந்த் மருத்துவமனையின் புகழ்மிக்க கண்மருத்துவர் டாக்டர் வெங்கிடசாமி உதவியுடன் இலவசக் கண் மருத்துவ முகாம்; ரத்ததானம், கண்தானம் ஊக்குவிப்பு; இலவச திருமண உதவி; ஊனமுற்றோருக்குச் செயற்கைக் கால் உதவி; சலவைத் தொழிலாளருக்கு 'அயர்ன் பாக்ஸ்'; கிராம மக்களுக்கும், மலைவாழ் மக்களுக்கும் மருத்துவ உதவி...

பொறுப்பாளர்கள் முத்துசாமியும், மகாதேவனும் சொல்லச் சொல்ல, எல்லா நடிகர்களின் ரசிகர் மன்றங்களும், நற்பணி இயக்கங்களாக மாறினால் எப்படி இருக்கும் என்று பகற் கனவு காணத் தோன்றியது!

தமிழக அரசின் சமூக நலத்துறை அங்கீகாரம் பெற்ற 'கொங்கு அறிவாலயம்', மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளின் நலன் பாதுகாக்க உருவான பள்ளி. இதற்கென சிறப்புப் பயிற்சி பெற்ற இளைஞர் ராஜேந்திரன், வேலை தேடும் முயற்சியில் தோற்றாலும், இப் பள்ளியை நிறுவுவதில் வென்றவர். ஈரோட்டின் 'தலைசிறந்த இளைஞர்' விருதை, ஜூனியர் சேம்பர் இவருக்கு வழங்கியிருக்கிறது. துணைவி வெங்கடேசுவரி ராஜேந்திரன், கணவருக்கு இந்த நற்பணியில் கைகொடுக்கிறார்.

'யார் என் பணியை ஆற்றுவார்?' என்று மறையும் கதிரவன் கேட்க, 'நான் இருக்கிறேன்!' என்றதாம் அகல்விளக்கு.

- நம்பி

# பிரதமர் நரசிம்மராவுக்கு ஒரு நல்லசேதி!

"உபயோகிப்பாளர் குழு ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒழுங்காய் இயங்குவதில்லையே!'' என்று சமீபத்தில் கூட மிகவும் வருத்தப்பட்டிருக்கிறார் பிரதமர் நரசிம்மராவ்.

பெரியார் மாவட்ட உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவைப் பொறுத்தவரை, அப்படி பிரதமர் வருத்தப்பட வேண்டிய அவசியமே இல்லை.

பேராசிரியர் ஜி. தங்கவேலு செயலாளராகவும், எஸ். கே. மயில்சாமிக் கவுண்டர் தலைவராகவும் இருந்து நடத்தி வரும் இந்தக் குழுவின் சேவைகளைப் பெரிய பட்டியல் போட்டுச் சொல்லலாம்.

''முதலில் 'மக்கள் மன்றம்' என்ற அமைப்பில் பொது மக்கள் குறைகளை, சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் எடுத்துச் சென்று நிவாரணம் தேடிக் கொடுத்து வந்தேன். பின், நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் நிறைவேறிய பிறகு இதையே உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவாக மாற்றி விட்டோம்!'' என்றார் தங்கவேலு.

நியாய விலைக் கடைகளில் விதியோகச் சீர்கேடு, போலி ரேஷன் கார்டுகளைக் கண்டுபிடித்தல், கலப்படத் தடுப்பு, சுற்றுச்சூழல் சுகாதாரப் பராமரிப்பு, என்று ஒவ்வொரு பிரச்னையிலும் தனிக் கவனம் செலுத்திக் குறைபாடுகளைக் களைந்து வரும் இந்த அமைப்பு, ஈரோட்டுக்குத் தனிச் சிறப்பு.

◄ ஜி. தங்கவேலு





◄ மயில்சாமி கவுண்டர்

குழு ஏற்பாடு செய்யும் கூட்டங்களுக்கு அதிகாரிகளையும் அழைத்து, அதன் வாயிலாக, பிரச்னைகளின் தீவிரத்தை அதிகாரிகள் உணர்ந்து, மக்களுக்கு உடனடியாக உதவும் வழி பிறந்திருக்கிறது.

இவர்கள் வெளியிடும் 'நுகர்வோர் குரல்' இதழ் பிரச்னைகளை வெகு தெளிவாக அலசுகிறது. கிடைத்த பரிகாரங்களை வெளியிடுகிறது. நுகர்வோர் சட்டங்கள் பற்றிய விளக்கங்கள் தருகிறது. ஜோக்குகளைக் கூட வெளியிட்டு, சுவாரசியமான விஷயத்தைச் சிரிக்கச் சிரிக்கச் சொல்லுகிறது!

- எஸ். வி. என்.



◄ பாக்கெட்டுகளில் பால் நிரப்பும் இயந்திரம்



◄ ஆதிமூலம்

# ஆகா, ஆவின்!

**வெ**ளுத்ததெல்லாம் பால் என்று ஆவின் நிறுவனம் நம்பி விடுவதில்லை. குறிப்பாக, பாலுக்குப் பணம் கொடுக்கிற போது. பாலில் எத்தனை கொழுப்புச் சத்து இருக்கிறதோ, அதைப் பொறுத்துத்தான் அதற்கான விலை தரப்படுகிறது.

ஈரோடு நகருக்கு முழுப் பெருமையும் கொடுத்து விடாமல், ஒரு பதினைந்து கிலோ மீட்டர் ஒதுங்கியே இருக்கிறது சித்தோடில் இருக்கும் 'ஆவின்' பால் பண்ணை.

சுமார் 560 பால் கூட்டுறவுச் சங்கங்களி லிருந்து, 36 சேமிப்புக் கூடங்கள் வழியாக, ஈரோடு பால் பண்ணையில் சங்கமம் ஆகிற பால் கிட்டத்தட்ட 94,000 லிட்டர்.

பிரம்மாண்டமான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் குடுவைகளில் சேகரிக்கப்படும் பால், பாஸ்ட்யுரைஸ் செய்யப்பட்டு, இயந் திர கதியில் பாக்கெட் செய்யப்படும் பகுதிக்கு வருகிறது. ராட்சச இயந்திரங் களில் பாலிதீன் தாளைப் பாக்கெட்டாக உருமாற்றிக் கொண்டு, உள்ளே கால், அரை லிட்டர் அளவுப்படி பால் விழுந்ததும் டபக்கென்று வாய் மூடி, டப்-டப் என்று சத்தம் எழுப்பியபடி கீழே விழுகின்றன. (அழுத பிள்ளைதான் பால் குடிக்கும் என்பார்கள். இங்கே பாலிதீன் பையும் பால் குடிக்கிறது!)

இடுப்பளவு உயரத்திலிருந்து கீழே போட்டால் பாக்கெட்டுகள் உடையாமல் இருக்க வேண்டுமாம். நம் கண்முன்னே, வேண்டுமென்றே ஒரு பாக்கெட்டை எடுத்துத் தூக்கிப் போடுகிறார் ஓர் அதிகாரி. அது வாய் பிளந்து பாலைச் சொட்டத் தொடங்கியது. அலட்சியமாக அதைத் தள்ளி விடுகிறார்!

''94,000 லிட்டர் பாலையுமா இங்கே விநியோகிக்கிறீர்கள்?''

''இல்லை. சுமார் 40,000 லிட்டர் வரை யில் இங்கே உள்ளூரில் விற்கிறோம். இதே அளவு பாலை, ஸ்டாண்டர்டைஸ் பண்ணி சென்னைக்கு அனுப்புகிறோம், தெர்மாஸ் ஃபிளாஸ்க் மாதிரி இன்சுலேட் செய்யப் பட்ட டாங்கர்களில்'' என்கிறார் டாக்டர் ரெஜினால்ட்.

மீதியைப் பால் பவுடராகவும், வெண் ணெயாகவும் மாற்றி விடுகிறார்கள்.

''ஸ்டாண்டர்டைசேஷன் என்கிறீர் களே, அப்படி என்றால் என்ன செய் வீர்கள்?''

''கூடுதல் fat ஐ ஒதுக்கி எடுத்து விட்டு 4.5 சதவிகித அளவில் வைப்பதுதான் ஸ்டாண்டர்டைசேஷன். பசும் பாலில் 5.5 அல்லது 5.6 சதம் இருக்கும். எருமைப் பாலில் 6.5 சதம் இருக்கும்.''

''அப்படியானால் இரண்டையும் கலந்து விடுவீர்களா?''

''ஆமாம்.''

**கா**ல்நடை மருத்துவர்கள் வாரா வாரம், மாடுகள் இருக்குமிடம் சென்றே மருத்துவம் செய்கிறார்கள். ஒரு நாளைக்கு 8 முதல் 10 சங்கங்கள் வரை பார்த்து விடுவார்கள். 16 கால்நடை மருத்துவர் களும், 10 மொபைல் கால்நடை மருத்துவ யூனிட்டுகளும் செயல்படுகின்றன. டாக்டர் களுக்கு வயர்லெஸ் செட்டுகள் கூடக் கொடுத்திருக்கிறார்கள். 24 மணி நேரச் சிகிச்சைப் பிரிவும் உண்டு.

அருகிலேயே இன்னொரு பெரிய தொழிற்சாலை உருவாகி வருகிறது. இப் போது பத்து டன் பால் பவுடர் தயாரிக்கும் திறன் கொண்டிருக்கும் இந்தப் பண்ணை வரும் ஓராண்டுக்குள் முப்பது டன் திறன் கொண்டதாக உயரும். மாநிலத்திலேயே இதுதான் மிகப் பெரிய ஆலையாக அப் போது இருக்கும்.

**பா**ல் வளம் மிகுந்த 'அமுல்' கோட்டையான குஜராத்திலேயே போய் 'ஆவின்' வெண்ணெயை வெற்றிகரமாய் விற்க முடியும் என்றால், அது நிச்சயம் ஒரு சாதனைதான்.

''எங்கள் நோக்கம் எல்லாம் கிராம வாசிகளின் வாழ்க்கைத் தரத்தைச் சற்றே மேம்படச் செய்வதுதான்!'' என்கிறார் பொது மேலாளர் ஆதிமூலம், அடக்கமாக.

– சாருகேசி

# நரசுஸ் அளிக்கும் புத்தாண்டு, பொங்கல் வெகுமதிகள் !



கேட்டீங்களா
சேதியை ?
நரசுஸ் காபி
வெகுமதி
கொடுக்கறாங்களாமே!



பேஷ், பேஷ்!
ரொம்ப
நல்ல
செய்தி!

**வெகுமதிகள் :**

- 35 கிலோவிற்கு எவர்சில்வர் பிளேட்.
- 10 கிலோவிற்கு எவர்சில்வர் டபரா செட்.
- 6 கிலோவிற்கு எவர்சில்வர் டம்ளர்.
- 2 கிலோவிற்கு துணிப்பை.
- ½ கிலோவிற்கு எவர்சில்வர் ஸ்பூன்.




மொத்தமாகவோ, சில்லரையாகவோ வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று, வெகுமதிகளைப் பெறுங்கள். 30.12.91 முதல் 1.2.92 -ல் முடியும் விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை.

அப்படியா ! இதோ போறேன் !
**நரசுஸ் காபி** வாங்க !



ஜீவனுள்ள ஒரே காபி!

# நரசுஸ் காபி



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007
கிளைகள்: தமிழகம் மற்றும் பாண்டிச்சேரியிலும்.

ADWAVE/NCC/



✱ மஞ்சள் தோட்டத்தில் இருப்பவர்கள், ஈரோடு வேளாளர் மகளிர் கலைக் கல்லூரி மாணவிகள்: அகிலா, புனிதா, ஹேமலதா, சுசீலா (அட்டையில் ஹேமலதா, அகிலா)

# மஞ்சள் வியாபாரத்தின் பெருமை— 'அம்போ' ஆகிவிடும் நிலைமை!

இந்தியாவின் எந்த மூலையில் மஞ்சள் விளைந்தாலும் சரி, அதன் விலையை நிர்ணயிக்கிற இடம் ஈரோடு தான். அரசின் மெத்தனத்தால் இந்தப் பெருமைக்கு ஆபத்து வந்து விடும் போல் இருக்கிறது. காரணம், மஞ்சள் வியாபாரிகளுக்கு எத்தனை தொல்லை கொடுக்க முடியுமோ, அத்தனை தொல்லைகளையும் கொடுத்துக் கொண்டிருக்கிறது அரசு.

ஈரோட்டிலிருந்து அஸ்ஸாம், பீஹார், டெல்லி ஆகிய இடங்களுக்கு மஞ்சளை விற்பனை செய்கிறார்கள். அப்படி விற்பனை செய்யும் போது, எந்தெந்த மாநிலங்களில் விற்பனை செய்கிறார்களோ, அந்தந்த மாநிலங்களிலிருந்து 'சி' - ஃபாரம் வாங்கிப் பூர்த்தி செய்ய வேண்டும். அப்போதுதான் மத்திய விற்பனை வரியாக நான்கு சதம் மட்டும் செலுத்தலாம். இல்லையெனில் பத்து சதம் வரி செலுத்த வேண்டியதாகி விடும்.

ஆமாம், இதிலென்ன பிரச்னை?

''இதில்தான் பிரச்னையே'' என்று விஷயத்தை விளக்கினார் ஈரோடு மஞ்சள் வியாபாரிகள் சங்கத்தின் செயலாளர் விஸ்வநாதன்.

''நாங்கள் அந்தந்த மாநிலங்களில் வாங்கிய 'சி' - ஃபாரங்களெல்லாம் போலியானவை என்கிறார்கள் விற்பனை வரித் துறையினர். அவை போலியானவை என்றால் நாங்கள் பத்து சதம் வரி செலுத்த வேண்டும். ஏற்கெனவே உண்மையானவை என்று நம்பிய 'சி' - ஃபாரங்களோடு நான்கு சதம் வரி செலுத்தியுள்ளதால் மீதியுள்ள ஆறு சதமும் அந்த ஆறு சதத்திற்கு ஒன்றரை மடங்கு ஃபைன் ஒன்பது சதமும் சேர்த்து மொத்தம் பத்தொன்பது சதம் கட்ட வேண்டும் என்கிறார்கள்!

''இது பற்றி நாங்கள் அரசிடம் எடுத்துச் சொல்லி விட்டோம். ஆனால், எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப் படவில்லை. கடைசியாக முதல்வரையும் சந்தித்துப் பிரச்னையை விளக்கலாம் என்றிருக்கிறோம். அவரிடமும் ஒரு நல்ல முடிவு கிடைக்கவில்லையென்றால், கடைசியாக நீதிமன்றத்திற்குச் செல்லலாம் என்று உத்தேசித்துள்ளோம். காரணம், எங்கள் பக்கம் நியாயம் இருக்கிறது. 'சி' - ஃபாரம் போலி என்றால் சம்பந்தப்பட்ட வருமான வரித் துறையினரும் அரசும்தான் பொறுப்பேற்க வேண்டுமே தவிர, எங்களிடம் 'தண்டம்' வசூலிப்பது எந்த விதத்தில் சரியாகும்?'' என்றார் விஸ்வநாதன்.

☛ விஸ்வநாதன்



ஒரு பக்கம், ''உற்பத்தியைப் பெருக்கு! வர்த்தகத்தைப் பெருக்கு! பொருளாதாரத்தை உயர்த்து! நாங்கள் உதவுகிறோம்; கட்டுப்பாடுகளைத் தளர்த்துகிறோம்'' என்று அரசு கோஷம் போடுகிறது; மறுபுறம் 'A', 'B' ஃபாரம் என்றும் 'C' ஃபாரம் என்றும் 4 சதம் வரி, விட்டால் பத்து சதம் வரி என்றும் போலி ஃபாரம் என்றும் போக்கற்ற ஃபாரம் என்றும் சறுக்கி விழுகிறது. நாடு எப்படி உருப்படும்?

**- எஸ். ஐ.**

அட்டை வண்ணப்படமும், ஈரோடு செய்திகள் தொடர்பான மற்ற படங்களும் : **யோகா**

● போக்குவரத்துப் பெருந்துகள் பொறியியல் கல்லூரி, சுருக்கமாக IRTT. போக்குவரத்து தொடர்பாக முதன் முதலாக இந்தியாவில் உருவான இன்ஸ்டிட்யூட் இதுதான். தமிழ்நாட்டிலுள்ள போக்குவரத்துக் கழகங்கள் எல்லாம் இணைந்து நடத்துகின்றன.

● நகராட்சி வளாகத்தில் இருக்கும் அருங்காட்சியகத்தில் சிற்பங்கள் தவிர, பழங்கால நாணயங்கள் பத்திரமாகச் சேகரிக்கப்படுகின்றன. சிக்கய்ய நாயக்கர் காலத்துத் தங்க, வெள்ளி நாணயங்களை, ஆற்றில் முழுகி எடுத்துக் கொடுத்திருக்கிறார் மோகன்ராஜ். இவர் ஒரு பூ வியாபாரி.



☛ ஈரோடு பஸ் ஸ்டாண்டு

# நகர்வலம்: நறுக்கென்று நாலு நாலு வரிகள்!

● பெரியார் மாவட்ட சேம்பர் அஃப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்டரி, மூன்று ஆண்டுகளுக்கு முன்பு தான் துவங்கப்பட்டது. மாவட்டத் தொழில் வளர்ச்சியிலும் வணிகத்துறையின் பிரச்னைகளிலும் கவனம் செலுத்தி வருகின்ற அமைப்பு.



☛ அரசு மருத்துவமனை

● ஏழு வருடங்களாக இயங்கி வரும் ஈரோடு திருப் பாவைக் குழு, ஆன்மீகத்துக்கும், சாஸ்திரீய இசைக்கும் தன் பணிகளைச் செய்து வருகிறது. மார்கழியில் ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில், தினம் ஒரு பாசுரமாக, திருப்பாவை விளக்கம் சொல்லப்படுகிறது. ''ராமநவமி உற்சவத்தை முன்னிட்டு, பத்து நாட்களும் புகழ் பெற்ற இசைக் கலைஞர் களின் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்கி றோம். இந்த வருடம் இந்துஸ்தானி பாடகி பர்வீன் சுல்தானா குத்துவிளக்கேற்றி, இசை நிகழ்ச்சி வழங்கிச் சிறப்பித்தார்!'' என்கிறார் வி.ஜே. வேணுகோபால். இவர் திருப்பாவைக் குழு தலைவர்.

● மகாகவி பாரதியார், ஈரோட்டிலுள்ள கருங்கல் பாளையத்தில் பேசியது தான் அவருடைய கடைசி பொதுக் கூட்டமாம். ஈரோட்டுக்கு வந்த முதல் பிரதமர் மொரார்ஜி தேசாய்.

● அருள் நெறி திருப்பணி மன்றம் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள், தாங்கள் வரைந்த ஓவியங்களைத் தாங்களே ஓர் ஓவியக் காட்சி அமைத்துப் பொது மக்கள் பார்வைக்கு வைத்திருந்தார்கள். நகரின்

மூத்த ஓவியர்கள் இவற்றுக்குப் பரிசுகள் வழங்கினார்கள்.

● ''ஈரோடு மக்கள் குடும்பக் கட்டுப் பாட்டில் ரொம்பவும் தீவிரமாக இருப் பவர்கள். இரண்டு குழந்தைகள் இருக்கும் ஒருவருக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப் படும் பெண், மூத்த தாரத்தின் குழந்தைகளே போதும் என்று தானாகவே முன்வந்து குடும்பக்கட்டுப்பாடு செய்து கொள்வாள் என்பது ரொம்பவும் ஆச்சரியமான விஷயம்!'' என்றார் மாவட்டச் சுகாதார அதிகாரி டி.ஜி. ராமமூர்த்தி.

டி.ஜி. ராமமூர்த்தி

● 'மிலன்' என்ற பெயரில், வட நாட்டு வியாபாரிகள் ஓர் இலவச மருத்துவ மனை நடத்தி வருகிறார்கள்.

● 'இளைஞர் சமுதாய மறுமலர்ச்சி இயக்கம்', 'சமதர்ம சகோதரர்கள் குழு', போன்ற பல அமைப்புகளுடன் போட்டி போட்டுக் கொண்டு திருநகர் காலனியில் உள்ள சித்தார்த்தா மெட்ரிகுலேஷன் பள்ளி மாணவர்களும் சமுதாயப் பணிகள் பல செய்து வருகிறார்கள்.

● மாதந்தோறும் இயல்-இசை-நாடகங்களை நடத்திவரும் சபா கவிதாலயம், நற்பணி மன்றமாகவும் திகழ்கிறது.

● பேருந்து நிலையங்களிலேயே முதன் முதலாக நிலையத்துக்குள் டீ.வி. பெட்டிகளை வைத்துப் பயணிகளைக் கவர்ந்தது ஈரோடுதான். ரயில்வே ஸ்டேஷன்களில் இருக்கும் 'வெயிட்டிங் ரூம்கள்' மாதிரி இங்கும் கட்டுவதற்கான முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

● இங்குள்ள அரசு மருத்துவமனை, மற்ற மாவட்ட மருத்துவமனைகளோடு ஒப்பிடுகையில் சுத்தமாக இருக்கிறது. பல வார்டுகளில் நோயாளிகள் பார்த்து ரசிப்பதற்காக டீ.வி. பெட்டிகள் வைக்கப் பட்டிருக்கின்றன.

- நிருபர்கள்

# காவிரியின் தூய்மையைக் காப்பாற்றுங்கள்!

**கா**விரி புனிதமானதுதான். ஆனால் அதன் புனிதத்தைக் காக்கத் தவறி விட்ட மனிதனை என்ன செய்வது?

''இப்போது காவிரி நீரில் உள்ள ஃப்ளோரைடின் அளவு அங்கீகரிக்கப்பட்ட அளவுக்குமேல் சென்று அபாயம் விளைவிக்கும் நிலையில் இருக்கிறது. இதனால் இந் நீரைப் பருகும் தாய்மார்களுக்கு 'Blue Baby' என்று சொல்லப்படுகிற உடல் வளர்ச்சி குன்றிய குழந்தைகள் பிறக்கும் அபாயம் இருக்கிறது.

''இதே போல் acanthamoeba என்கிற அமீபாவின் அளவும் அபாய கட்டத்தின் அளவுக்கு மேல் இருப்பதால், இந் நீரைக் குடிக்கவும் குளிக்கவும் பயன் படுத்துபவர்களுக்குப் பார்வைக் கோளாறு ஏற்படும் அபாயமும் இருக்கிறது'' என்கிறார் ஒருங்கிணைந்த காவிரி சுற்றுச்சூழல் ஆய்வுத் திட்டத்தின் கீழ் தம் மாணவர்களோடு இந்த ஆய்வில் ஈடுபட்டிருக்கும் சிக்கய்ய நாய்க்கர் கல்லூரி விரிவுரையாளர் டாக்டர் சரவண பாபு.

''மாசுக்கு முக்கிய காரணம் பல்வேறு தொழிலகங்களின் கழிவுநீர்தான்'' என்கிறார். ''இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் எங்கள் ஆய்வின் அபாயகரமான முடிவுகளைத் தமிழக மாசுக் கட்டுப் பாட்டு வாரியத்தினர் ஒப்புக் கொள்ள மறுக்கிறார்கள் என்பதுதான்!''

மத்திய அரசின் இந்தத் திட்டத்தின் கீழ், இவர்கள் எடுத்துக் கொண்ட பகுதி, ஒகேனக்கல்லிலிருந்து பவானி வரையிலான காவிரியை மட்டும்தான். காவிரியின் மற்ற பகுதிகளில் மற்ற கல்லூரி மாணவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களின் முடிவு இன்னும் என்னென்ன அபாயங்களை எச்சரிக்கப் போகிறதோ!



இந்தியப் பொருளாதாரம்

கந்தல் துணி ரெடி... ஓட்டையை அடைச்சிடலாம்!









# டாக்டர் ஜெயலலிதா

“ஜெயலலிதாவுக்கு டாக்டர் பட்டம் வழங்கப்பட்டதால், யாருக்கு என்ன பயன்?” என்று ஒரு நாளிதழும் துணிந்து கேட்டு விட முடியாது! பக்கம் பக்கமாக வெளியான விளம்பரங்கள் மூலம் மிக அதிகமான பயன் அடைந்தவை நாளிதழ்களே. அடுத்து, தென்னை மர உயர போஸ்டர்களை அச்சடித்த அச்சகங்கள். இந்த அபரிமித விளம்பரங்களும் இதர ஆர்ப்பாட்டங்களும் ஒரு கசப்புணர்வை ஏற்படுத்தவே செய்தன. ஒருவர் முதல்வரான உடனே டாக்டர் பட்டம் வழங்கப் பல்கலைக் கழகங்கள் போட்டி போடுவது அநாகரிக மாகவும் தோன்றுகிறது. இரண்டு மூன்று ஆண்டுகள் சென்று, முதல்வரின் நற்பணிகள் பலன் தரத் தொடங்கிய பின், டாக்டர் பட்டம் வழங்கப் பட்டிருந்தால் இத்தகைய எண்ணங்கள் தோன்றாது.

இது ஒருபுறமிருந்தாலும், 'டாக்டர் பட்டம் பெறத் தகுதியற்றவர்' என்பதாக ஜெயலலிதாவை யாரும் கூறி விட முடியாது. சென்னை மியூஸிக் அகாடமி விழாவில் ஆற்றிய தொடக்க உரை, டில்லியில் தேசிய அபிவிருத்திக் குழு கூட்டத்திலும் பட்டமளிப்பு விழாவின் போதும் நிகழ்த்திய சொற்பொழிவுகள் ஆகிய மூன்றுக்காகவும் மூன்று டாக்டர் பட்டங்களைக் கூட வழங்கலாம். அவ்வளவு அர்த்த புஷ்டியுடன் அவை விளங்குகின்றன. அவற்றை அவரே தயாரித்தாரா, வேறு யாராவது எழுதித் தந்தார்களா என்பது பிரச்னையல்ல. அவை அவருடைய நம்பிக்கைகளை வெளிப்படுத்தின என்பதுதான் முக்கியம்.

மியூசிக் அகாடமியின் தொடக்க உரையில், நமது பாரம்பரியப் பெருமைமிக்க கர்நாடக இசையின் பல்வேறு சிறப்புக்களை இசைவல்லுனர்களே ஆச்சர்யப்படும்விதமாக மிக விரிவாக எடுத்துரைத்தார் முதல்வர். இந்தச் சிறந்த இசையின் தூய்மை கெடாமல் பாதுகாத்து, அடுத்துவரும் தலைமுறையிடம் அப்படியே ஒப்படைக்க வேண்டிய கடமை நமக்கு இருப்பதை நினைவூட்டினார்.

பட்டமளிப்பு விழா பேச்சிலோ, சமுதாய ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் பயன்தரத்தக்க வேலை வாய்ப்புக்களை ஏராளமான இளைஞர்களுக்குப் பெற்றுத் தர வேண்டிய பெரிய பொறுப்பு கல்வித் துறைக்கு இருப்பதை அவர் நினைவூட்டினார். மக்கள் நிரட்சரகுட்சிகளாக இருப்பதை மாற்றி அமைத்தால் போதாது; கொடுக்கப்படும் கல்வி, சமுதாய - அரசியல் விழிப்புணர்வை மக்களிடம் ஏற்படுத்த வேண்டும்; ஒருமைப்பாட்டை வளர்க்க வேண்டும்; எதற்கு முக்கியத்துவம் தர வேண்டும், எது நல்லது, எது கெடுதல் என்றெல்லாம் எடை போடும் ஆற்றலை அளிக்க வேண்டும்; எல்லாப் பிரச்னைகளிலும் மக்களுடைய அணுகுமுறை மனிதாபிமானத்தையும் அன்பையும் அடிப்படையாகக் கொண்டதாக இருக்க உதவ வேண்டும்; கவவேலை வாய்ப்பு அளிக்கக்கூடிய தொழிற் கல்வியாகவும் அது விளங்க வேண்டும். இதற்கெல்லாம் அனுசரணையாக பாடத் திட்டங்கள் மாற்றி அமைக்கப்படுவதோடு, சிறந்த ஆசிரியர்களையும் உருவாக்க வேண்டும்.

டில்லி தேசிய அபிவிருத்திக் குழு கூட்டத்தில் தமிழ்நாட்டின் நலன் கருதி நிதி ஒதுக்கீடுகளுக்காகச் சக்திவாய்ந்த விதத்தில் வாதாடியதோடு, மாநிலங்கள் தங்கள் வளர்ச்சிக்கான திட்டங்களைத் தாங்களே வகுத்துக் கொண்டு போட்டியிட்டு முன்னேறச் சுதந்திரம் இருக்க வேண்டும் என்ற அருமையான சிந்தனையையும் முன்வைத்திருக்கிறார். கங்கை - காவிரி இணைப்பு தற்போது கனவாக இருப்பினும், தென்மாநிலங்களின் நதிகளையேனும் இணைக்க முயற்சி மேற்கொள்ளலாம் என்று கூறியிருக்கிறார். குடும்பநலத் திட்டத்தை வெற்றிகரமாக அமுல்படுத்தியதால் தனி நபர் வருமானம் அதிகரிக்க, தமிழகத்துக்குப் பல அம்சங்களில் நிதி ஒதுக்கீடு குறைந்திருப்பதைச் சுட்டிக்காட்டி, 'திறமைக்குத் தண்டனையா?' என்று கேட்டிருக்கிறார்.

இவ்வாறெல்லாம் சிறந்த சிந்தனைகளைச் சுமந்து வரும் பேச்சுக்கள் காரணமாகப் பாமர மக்களை மட்டுமின்றி அறிஞர் பெருமக்களையும் கவர்ந்து வருகிறார் முதல்வர். அவரது செல்வாக்கு படிப்படியாக மேலும் மேலும் அதிகரித்து வருவதை சென்னை கிறிஸ்துவக் கல்லூரி நடத்திய ஓர் ஆய்வு மெய்ப்பிப்பதில் வியப்பில்லை.

ஆனால் ஒன்று, சொல்லுக்கும் செயலுக்கும் நிறைய இடைவெளியிருப்பதைக் கடந்த காலத்தில் நாம் பல ஆட்சியாளரிடம் கண்டிருக்கிறோம். அவ்வாறின்றி, ஜெயலலிதா செயல் வீரராகவும் விளங்கினால்தான் தமிழகம் முன்னேறும்; சரித்திரம் அவருக்கு இடமளிப்பதுடன் போற்றவும் செய்யும்.



கல்கி 50

1992
ஜனவரி 5
மலர் : 50
இதழ் : 23
பிரஜோத்பத்தி
மார்கழி 21

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# கே. பாக்யராஜ்



தலைசுத்திக் கீழே உழுகறதுக்கிருந்தாரு பெரிய பண்ணை. ஆனா அதுக்குள்ளார பண்ணாடிச்சி மளார்னு ஓடி வந்து தாங்கிப் புடிச்சுட்டாங்க. 'இத்தனை பாடுபட்டு, போற காலத்துல எதுக்குடா அமெரிக்காவுக்குப் புறப்பட்டு வந்தோம்'னு ஆயிப் போச்சு பெரிய பண்ணைக்கு.

'எங்க ஒரே புள்ளை சின்னப் பண்ணை அமெரிக்காவுல டாக்டர் படிப்புக்குப் படிக்குது'ன்னு ஊரைக் கூட்டி எவ்வளவு பெருமையாச் சொல்லிட்டு வந்தோம். எல்லாம் இப்படி ஒரு கண்றாவியப் பாக்கறதுக்குத் தானான்னு பண்ணாடிச்சி கூட துடிச்சுப் போயிட்டாங்க. இருந்தாலும் பெரிய பண்ணை அளவுக்கு இடிஞ்சு போகலை!

ஏரோப்ளேன் இறங்கற இடத்துக்கே வந்து ரெண்டு பேரையும் கார்ல கூட்டு வந்த சின்னப் பண்ணை வழி பூராம் ஏதேதோ பேசிட்டு சிரிச்சுட்டு வந்தான். இதைப் பத்தி ஒரு வார்த்தை கூடச் சொல்லலையே! காரை வுட்டு இறங்கி சின்னப் பண்ணை இருக்கற ஊட்டுக்குள்ளார நுழைஞ்சப்போ, அங்கே ஒரு சின்னக் கொழந்தை வெளயாடிட்டிருந்தது. அதோட தலைமுடி நம்மூர் மாதிரி கருகருன்னும் இல்லாம, அந்த ஊர் மாதிரி செம்பட்டையும் இல்லாம ரெண்டும் கலந்து ஒரு மாதிரியா இருந்துச்சு. 'யாரு பொன்னா இது?'ன்னு பண்ணாடிச்சிம்மா தன் புள்ளை சின்னப் பண்ணையப் பாத்துக் கேட்டாங்க. அதுக்கு சின்னப் பண்ணை, ''மம்மி! இது எனக்குப் பொறந்ததுதான்! எங்க காலேஜில படிக்கற ஒரு பொண்ணோட எனக்குச் சிநேகமாயிடுச்சு. அவதான் இதைப் பெத்தா, ஆனா இன்னும் எங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் ஆகலை! வேணும்னாக் கல்யாணம் பண்ணிக்கலாம். இல்லேன்னாலும் தப்பில்லே. குழந்தைய யாரோ ஒருத்தர் பொறுப்புல வெச்சுட்டு ரெண்டு பேரும் பிரிஞ்சு போயிரலாம்.''

பெரிய பண்ணை அப்பவே வெளியே வந்து தலைசுத்தி விழப்போனவரைத்தான் தாங்கிப் புடிச்சு வீதியில உட்கார வச்சாங்க. பெரிய பண்ணை மனசுல இப்ப என்ன உறுத்திட்டிருக்கும்னு பண்ணாடிச்சிக்கு நல்லாத் தெரியும். பண்ணாடிச்சி கூட ஒரு சின்ன உறுத்தலோட தங்களோட மூத்த பொண்ணைப் பத்தி நினைச்சுப் பார்த்தாங்க.

இப்போ அமெரிக்காவுல டாக்டர் படிப்புப் படிக்கற இந்தப் பையனுக்கு அவ அக்கா! அவ வயசுப் புள்ளையா இருக்கறப்ப ஒரு நாளு, வயித்தக் கலக்குதுன்னு வாந்தியெடுத்தா. மயக்கம் போட்டு வுளுந்தா. ரகசியமா டவுன்ல இருக்கற டாக்டரு வந்தாரு. சோதிச்சுப் பாத்துட்டு இனி எதும் பண்ண முடியாதுன்னு சொல்லிட்டுப் போயிட்டாரு.

சுத்துப்பட்டு நாலு கிராமத்துக்கும் பஞ்சாயத்துப் பண்ற பெரிய பண்ணை, இந்த சேதியக் கேட்டு உங்காமெ உறங்காமெ, தலையில துண்டப் போட்டுக்கிட்டு கூனிக்குறுகி வூட்டுக்குள்ளாறயே குந்திட்டாரு.

'பாவி மவளே... என்னடி ஆச்சு?'ன்னு பண்ணாடிச்சிம்மா விசாரிச்சப்போ, அந்தப் பொண்ணு விசும்பிக்கிட்டே பேசுனா. பம்பு செட்டுக்கு ரிப்பேர் பண்ண பக்கத்து டவுனிலிருந்து வந்த கரெண்டுக்காரன் பையன் கூட சினேகிதமாயி, கல்யாணம் கட்றேன்னு அவன் தலையிலடிச்சுச் சத்தியம் பண்ணதாலே தப்பு நடந்திடுச்சாம். பையன் என்ன சாதின்னு பண்ணாடிச்சி விசாரிக்க விழுந்தடிச்சு வெளியே ஓடினா. ஆனு அந்த கரண்டுக்காரன் அப்பத்

# பெரிய பண்ணை மானாங்கு!

தான் ஏதோ கம்பத்துல ஏறி, கரண்டு புடிச்சி, அம்போன்னு போயிட்டான்னு தகவல் வந்துச்சு.

பண்ணாடிச்சிம்மா மூலமா எல்லாத்தையும் கேட்டுத் தெரிஞ்சிக்கிட்ட பெரிய பண்ணை, ஒரு முடிவெடுத்தாரு! அப்போ டாக்டருக்குப் படிக்கற இந்த சின்னப் பண்ணைக்கு ஆறு வயசுதான் இருக்கும். பெரிய பண்ணாடி நாலு லோட்டாவுல கறந்த பாலை ஊத்தி, அதுல பாலி எந்த போலீஸ்காரனும் எம் மேலிருக்கற மருவாதையில மறு கேள்வி கேக்க மாட்டான்! வெறும் இழவா ஊரு அழுது முடிஞ்சிரும். அப்படியில்லை நாலு பேரும் குடிச் சுடுவோம். நானும் உங்க ஆத்தாளும் சாக பயப்படலை. ஆனா செத்ததும் நல்லா இருந்த பெரிய பண்ணை பாலிடாலைக் குடிக்கற அளவுக்கு என்னாச்சுன்னு கேள்வி வந்து உன் சமாச்சாரம் வெளியே வந்தா செத்தப்பறமும் ஊரு கரிச்சுக் கொட்டும். நீ





டாலக் கலந்து நடு ஊட்ல வச்சாரு!

நேரா பொண்ணைக் கூப்புட்டாரு.

'இதோ பாரு புள்ளே! இந்த நாலு லோட்டாவுலயும் வெஷந்தான். ஊரெல்லாம் சின்னப் பண்ணைன்னு செல்லமாக் கூப்புடுற உன் தம்பி, நீ செஞ்ச தப்புக்கு அநியாயமாச் சாக வேண்டாம்னா, அதோட நம்ம மானம் மரியாதை போகக் கூடாதுன்னா ஒரே ஒரு லோட்டாவை நீ எடுத்துக் குடிச்சுரு! வெடிஞ்சதும், எம் மக வயித்து வலியில செத்துட்டான்னு நான் சொன்னா ஒருத்தின்னா குடும்ப மானம் மரியாதை மிஞ்சும். இல்லை எல்லாரும்னா அதும் மிஞ்சாது. என்ன சொல்றே? ஒரு லோட்டாவா இல்லை நாலு லோட்டாவா?'

பெரிய பண்ணை இம்புட்டு கறாராப் பேசினதும் பொண்ணு தம்பிக்காரனை கட்டிப் பிடிச்சு முத்தம் கொடுத்துட்டுப் பெரிய பண்ணை கால்ல விழப் போனா. பண்ணை துண்டை வாயில பொத்திட்டு

மேல மொகுட்டோட்டப் பாத்து அழுகைய அடக்க - பண்ணாடிச்சி தலை தலையா அடிச்சுக்க பொண்ணு ஒரு லோட்டாவுல இருந்ததைக் கண்ணை மூடிட்டு விக்க லோட குடிச்சு முடிச்சா! அதோட அவ கதை முடிஞ்சது. அதுக்கப்புறம் ஒரே வாரிசா இருந்த பையனை, பெரிய பண்ணை ஊரெல்லாம் மெச்சணும்னு நெனச்சு, அமெரிக்காவுக்கு அனுப்பிச்சு டாக்டர் படிப்பு படிக்க வெச்சிருக்காரு. அந்தப் பையன் தான் இன்னிக்கி, பச்சக் கொழந்தைய ரூம்புல வெச்சுட்டு நாக்குக் கூசாம இது எனக்குப் பொறந்த குழந்தைன்னு பேசறான்! அது மட்டுமில்ல...

''ஏன்டா பொன்னா! இது நாயமா?''ன்னு ஆத்தாக்காரி கேட்டதுக்கு அந்த சின்னப் பண்ணை என்ன சொன்னாந் தெரியுமா? ''இதுல ஒண்ணும் தப்பில்லம்மா! இப்ப காலம் மாறிப் போச்சு. இதெல்லாம் இந்த ஊர்ல சர்வசாதாரணம். நா வேண்டாம்னு சொன்னா, இந்தக் குளந்தையப் பெத்த அந்தப் பொண்ணு கூட வருத்தப்பட மாட்டா!'' - அப்போ அந்தப் பொண்ணே நேர்ல வந்தா! வந்தவ நேருக்கு, நேரா பண்ணாடிச்சிகிட்டே, ''எஸ்.. என்னை உங்க பையன் லைக் பண்ணலேன்னா இந்த நிமிஷம் கூட நான் தனியாப் போயி என்னை நான் காப்பாத்திக்க முடியும்''னு சொன்னா.

ஒரு மாசம் அமெரிக்காவை சுத்திப் பாக்கலாம்னு வந்த பெரிய பண்ணையும் பண்ணாடிச்சியும், வந்த அடுத்த நாளே ஊருக்கு டிக்கெட்டு போடச் சொல்லி ஏரோப்ளேன்ல ஏறிக் குந்திட்டாங்க. வழி பூராம் பண்ணை வாயே திறக்கலை. பொண்ணு விஷயத்துல அவ்வளவு கண்டிஷனா பாலிடாலைக் கலந்த மனுஷன், பொட்டாட்ட இப்ப திரும்பி வந்தது பண்ணாடிச்சிக்கே மலப்பாத்தான் இருந்துச்சு. நம்ம ஊர் வரப் போகுதுன்னு ஏரோப்ளேன் ஓட்றவங்க சொன்னப்ப. பெரிய பண்ணை 'ஒன்னுக்குப் போறேன்'னு பண்ணாடிச்சி கிட்ட சொல்லிட்டு பாத்ருமுக்குள்ளாற போனாரு! சித்த கழிச்சு திரும்பி வந்தாரு. பெரிய பண்ணையோட கண்ணெல்லாம் செவந்திருந்துச்சி. மேல் துண்ட எடுத்து வாயில பொத்திட்டே கண்ணுல தண்ணியோட பண்ணாடிச்சிகிட்டே, ''என் பொண்ணை பாலிடாலைக் குடுத்து அனுப்பி வச்சேன். அதுக்குப் பரிகாரமா இப்ப நான் மோதிரத்தைப் பொடி பண்ணி முழுங்கிட்டேன். நம்ம நாட்டுச் சீமையில யாராவது கேட்டா ஏரோப்ளேன்ல வர்றப்ப நெஞ்சு வலியில பெரிய பண்ணை காலமாயிட்டாருன்னு சொல்லிரு! இல்லேன்னா மானம் போயிரும். பொண்ணு போன எடத்துக்கே நானும் போய்ச் சேந்துடறேன்!''னு மானத்தைக் காப்பாத்திட்டதாக் கண்ணை மூடிட்டாரு பெரிய பண்ணை!




# அருவியெனப் பால்தரும் கறவைகளின் தீவனம்

கறவையினங்களின் பயனை நீங்கள் முழுவதும் அடைய உதவுகிறது SKM மாட்டுத்தீவனம். ஆம்! SKM மாட்டுத்தீவனம் பயன்படுத்தப்படுவதால் உங்கள் கறவையின் பால்வளம் பெருகுவதோடு கறவையினங்களும் ஆரோக்கியமாக வளர்கிறது. நோயெதிர்ப்பு சக்தியால் கறவைகளின் ஆயுளும் அதிகரிக்கிறது.

**SKM மாட்டுத்தீவனங்கள் பால் கொடுக்கும் கால் நடைக்கு பலம் கொடுக்கும் தீவனம்.**

தயாரிப்பாளர்கள்

**SKM அனிமல் ஃபீட்ஸ் அண்டு புட்ஸ் (இந்தியா) லிமிடெட்**

180, காந்திஜி ரோடு, ஈரோடு - 638 002. போன் : 75213 to 17 EPBABX

தந்தி : ''பவுல்ட்ரி'', ஈரோடு. டெலக்ஸ் : 0856-226 SKM IN

# அன்புள்ள அலமு அக்கா,



'எத்தனையோ பத்திரிகைகளில் எவ்வளவோ டிப்ஸ் கொடுக்கிறார்களே... வீட்டு வேலை செய்யும் பணியாட்களை மகிழ்வித்து எப்படி தக்கவைத்துக் கொள்ளலாம் என்று டிப்ஸ் கொடுக்கக் கூடாது...?' - நேற்று லஞ்ச் அவரில் நான் இப்படிச் சொன்னதுதான் தாமதம், ரோஹிணி டிப்ஸ் மாரி பொழிய ஆரம்பித்து விட்டாள். அந்த மழையிலிருந்து சில உருப்படியான துளிகளை உனக்கும் எழுதுகிறேன் :

- வேலைக்காரிதானே என்று தண்ணி காப்பியைக் கொடுக்காதீர்கள். ஒருவேளை காப்பி தந்தாலும் நீங்கள் குடிக்கும் தரத்திலேயே அது இருக்கட்டும்.
- நல்ல நாளில் சுமங்கலிகளுக்கு வெற்றிலை, பாக்கு, ரவிக்கைத் துணி இத்தியாதி கொடுக்க விரும்பினால் நம் வீட்டுப் பணிப் பெண்ணுக்கே அதைக் கொடுக்கலாம். உண்மையிலேயே தேவையுள்ள ஒரு நபருக்கு அது போய்ச் சேரும்.
- குழந்தைகளுக்குச் சின்னதாய்ப் போய் விட்ட துணிமணிகளை வேலைக்காரர்களின் குழந்தைகளுக்கே கொடுக்கலாம். துணிமணிகள் வாங்கும் சக்தியுள்ள உறவினர்களின் குழந்தைகளுக்குத் தருவானேன்.
- நேரம் தவறாமலும் மட்டம் போடாமலும் வேலைக்கு வந்தால் சின்ன போனஸ் கொடுங்கள்.
- உங்கள் வீட்டு நவராத்திரி, குழந்தையின் பர்த்டே போன்ற நிகழ்ச்சிகளுக்கு அவர்கள் வீட்டுக் குழந்தைகளை அழைத்து வரச் சொல்லிக் கையில் ஏதாவது கொடுத்தனுப்புங்கள்.
- எவ்வளவு கோபம் வந்தாலும் குரல் உயர்த்திப் பேசாதீர்கள். கண்டிப்பும் கண்டனமும் மிதமான குரலில் இருக்கட்டும்.
- 'ஏன் இதைச் செய்யவில்லை?' என்று கேட்காதீர்கள். 'செய்து விடு' என்று சொல்லுங்கள். 'சொல்லாமலே செய்யக் கற்றுக் கொள்' என்று கூறுங்கள். கேள்வி கேட்டால் பதில் வரும்; வார்த்தை வளரும்.
- வேலைக்காரர்களிடம் தேவைக்கு அதிகமாகப் பேச வேண்டாம். அவர்களே கூறும் சொந்த விஷயங்களையும் அதிகமாகப் பாராட்ட வேண்டாம்.
- இப்படியெல்லாம் செய்தால், நீங்கள் அவர்களுடைய மதிப்பைப் பெற முடியும். உங்களுக்கும் அவர்கள்பால் அதிகாரப் போக்குக் குறைந்து மதிப்பு உண்டாகும். கௌரவமான உறவு முறைக்கு வழிபிறக்கும்.

அடுக்கடுக்காய் அட்வைஸ் தந்த ரோஹிணியிடம் கேட்டேன் : 'உங்கள் வீட்டு வேலைக்கார அம்மாள் எப்படி...?' 'நாங்கள் வேலைக்கு ஆளே வைத்துக் கொள்வதில்லை... எல்லா வேலைகளையும் பகிர்ந்துக்கிட்டு நாங்களே செய்துடுவோம்...' என்றாள்! இப்போது தெரிகிறதல்லவா அவளால் இவ்வளவு சுலபமாக எப்படி டிப்ஸ் தர முடிகிறது என்று...!



பிரியமுடன்,
அமு

# விட்டுக் கொடுத்து வாழும் கூட்டுக் குடும்பம்!

'இந்த அவசர யுகத்தில் கூட்டுக் குடும்பம் சாத்தியமில்லை' என்பவர்கள் ஈரோட்டிலுள்ள 72 வயதான கைத்தமலையின் குடும்பத்தைப் போய்ப் பார்க்க வேண்டும். மனைவி, திருமணமான நான்கு மகன்கள், ஒன்பது பேரக் குழந்தைகள் என்று மொத்தம் பத்தொன்பது பேர் கொண்ட கூட்டுக் குடும்பம் அவருடையது. காந்திஜியையும் ராஜாஜியையும் தமது தலைவர்களாக ஏற்றுக் கொண்டதால் மகன்களுக்கு ரகுபதி, ராகவன், ராஜாராம், பூபதி என்று பெயர் வைத்திருக்கிறார்.

ஆமாம், இந்தக் கூட்டுக் குடும்பத்தைப் பராமரிப்பது யார்?

''குடும்பத்திற்கான சாப்பாட்டுச் செலவு முழுவதையும் நானேதான் கொடுக்கிறேன். மகன்களிடமிருந்து அதற்காகக் காலணாக் கூட பெற்றுக் கொள்வதில்லை'' என்கிறார் கைத்தமலை.

வருமானம்? வீடுகளிலிருந்து வரும் வாடகைப் பணம் இவரைச் சார்ந்தது. துணி வியாபாரம் செய்யும் நான்கு மகன்களின் லாப - நஷ்டமும் அவரவரைச் சேர்ந்தது. அவரவர் குழந்தைகளின் படிப்புச் செலவுகளை அந்தந்தக் குழந்தைகளின் பெற்றோர் தான் கவனித்துக் கொள்ள வேண்டும்.

ஆண்கள் ஒத்துப் போவதில் ஒன்றும் ஆச்சரியமில்லைதான். நான்கு மருமகள்களோடு எப்படி ஒத்துப் போகிறார் திருமதி கைத்தமலை?

''ஒவ்வொரு மருமகளும் ஒவ்வொரு நாள் சமையல் என்று முறை வைத்துக் கொண்டு சமைக்கிறார்கள். நான்கு மருமகள்கள் இருக்கிறார்களே என்று நானும் சும்மா இருப்பதில்லை. நானும் சமையல் வேலைகளைக் கவனிக்கிறேன். எனவே எங்களுக்குள் எந்தப் பிரச்னையும் இருப்பதில்லை'' என்றார் திருமதி கைத்தமலை.

மருமகள்களிடம் கேட்ட போது, ''ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் குணம் இருப்பதால் எங்களுக்குள் பிரச்னைகள் ஏதும் வருவதில்லை!'' என்றார்கள்.

அனைவரையும் சேர்த்து வைத்து குரூப் போட்டோ எடுக்கத் தயாரான போது, ''எங்கள் வீட்டில் ரொம்ப வருஷங்களாக வேலை செய்து வரும் அபிராமனும் எனக்கு ஒரு மகன் போலத்தான்'' என்று அபிராமனையும் அழைத்து வந்தார் கைத்தமலை. பொமரேனியன் நாய்க் குட்டியோடு வந்து போஸ் கொடுத்தனர் பேரக் குழந்தைகள்!



நட்பு, சுதந்திரம், அன்பு, இவற்றில் எதையும் டப்பாவில் அடைத்து கடைகளில் விற்க முடியாது. அவ்வாறே உள்ளது உலகில் சிறந்த குழந்தை உணவான தாய்ப்பால்.

உங்கள் குழந்தை மேலுள்ள அக்கறை மற்றும் அன்புக்கு ஒரு நலமான வடிவு அளிப்பது இதுவே. நீங்களே இதை காண்பீர்கள். உங்கள் குழந்தை உங்கள் இதமான மற்றும் பாதுகாப்பான அரவணைப்பில் மகிழ்வதைப் போன்று வேறு எதிலும் இல்லை. தாய்ப்பால் கொடுப்பதைப் போன்ற நெருக்கமான பிணைப்பை உங்களுக்கும் மற்றும் உங்கள் அன்பின் சின்னத்திற்கும் இடையே உலகில் வேறெதுவும் ஏற்படுத்த முடியாது. ஒரு இதமான உணர்வு பிணைப்பை உண்டாக்கி அதை நிலைநிறுத்துவது எந்த ஒரு மாற்று உணவிற்கு அப்பாற்பட்ட செயலாகும்.

ஒரு மாற்று உணவும் இயற்கை படைப்பான தாய்ப்பாலுக்கு ஈடாகாது— எளிதாக ஜீரணமாகும் புரதங்களுக்கு, இயற்கை தாதுப்பொருட்களுக்கு, சர்க்கரையை சக்தியாக மாற்றுவதற்கு. உண்மையாக, தாய்ப்பாலில் உங்கள் மழலைச் செல்வத்தின் உடல் நலத்திற்கு தேவையான ஒவ்வொரு பொருளும், மறுமுறை ஒவ்வொரு பொருளும், உள்ளது. ஏனெனில், அது உங்களிடமிருந்து வருவதால்.

மற்றும், அன்னையே, உங்களைத் தவிர உலகில் வேறு யார் இதைவிட நன்றாகச் செய்ய முடியும் ?

நல்ல காலமாக உலகில் சிறந்த குழந்தை உணவு எந்த ஒரு கடையிலும் கிடைப்பதில்லை.

அமுல் இந்த அறிவுரையை ஒவ்வொரு இந்திய அன்னை மற்றும் அவள் குழந்தைக்கு அர்ப்பணிக்கிறார்கள்.



## 23

# கம்ப்யூட்டர் கிராமம்

மனோஜ் ப்ரமிளாவை நிதானமாகப் பார்த்தான். இப்போது அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக விஷயம் புரிவது போலத் தோன்றியது. அதனால் ஒருவிதமான ஏமாற்றமும் அசட்டுத்தனம் கலந்த ஆத்திரமும் உருவாகத் துவங்கியது. ''என்னை ஏமாற்றினியா?''

''ஆமாம் ரொம்ப ஸாரி. ரொம்ப ரொம்ப ஸாரி.''

ஷண்பேகர் கண்ணைக் காட்ட, அவள் சற்றே சதித்தனத்துடன், ''அப்புறம், தனியா இருக்கறப்ப சொல்றேன்'' என்றாள்.

''சொல்லு இப்பவே.''

ஷண்பேகர் அவனருகில் வந்து, ''மனோஜ் பிடிவாதம் பிடிக்காதே. எல்லாம் நன்மைக்குத்தான் செய்தது.''

''உனக்கும் இந்தச் சதியில் பங்கு உண்டா?''

''நான்தான் சதி பண்ணியதே. ப்ரமிளா நிறைவேற்றினாள்.''

அதற்குள் பலர் அவளை அழைத்துச் செல்ல, மனோஜும் ஷண்பேகரும் மொட்டை மாடியில் தனியாக இருந்தார்கள்.

''இப்போது எனக்கு ஒருவாறு புரிகிறது'' என்றான் மனோஜ்.

''என்ன புரிகிறது?''

''எல்லாமே சதி. திட்டமிட்டுச் செய்யப்பட்டு விட்டது!''

''செல்வியின் மரணத்தை தவிர.''

''செல்வியின் மரணத்தைப் பயன்படுத்திக் கொண்டாய்.''

''ஆம். முதலில் எனக்கு பயம், அப்புறம் குழப்பம் ஏற்பட்டது. அந்தப் பெண்ணுடன் கொஞ்சம் சிறுவிஷமம் பண்ணப் போய், தெரியாத்தனமாய் மாட்டிக் கொண்டு விட்டோமே என்று, அவள் அன்று சினிமாக் கொட்டகையிலிருந்து சைட்டுக்கு வந்து என்னிடம் இருந்து விட்டு வெளியே போன போது, ஷண்முகமும் பூசாரியும் தொடர்ந்திருக்கிறார்கள், தப்பான எண்ணத்துடன். அது முதலில் எனக்குத் தெரியாது. செல்வி மரத்தில் தொங்குகிறாள் என்று தெரிந்ததும் வெலவெலத்து விட்டது. போலீஸ் என் மேல் சந்தேகப்பட்டு அரஸ்ட் பண்ணவே, 'டெஸ்பரேட்' ஆகி தப்பித்து ஓடி விட்டேன். ஆனால் அதன்பின் முதலில் கிராமத்தில் வயல் வரப்புக்களிடையே திரிந்தேன். லாரியில் லிப்ட் வாங்கிக் கொண்டு, சென்னை வந்து விட்டேன். மோதிரத்தை விற்று பம்பாய் போய் விட்டேன். கொஞ்ச நாள் விட்டு, மறுபடி கிராமத்துக்குள் வேறு வேஷத்தில் நுழைந்து, செல்வியைக் கொன்றது யார் என்று கண்டுபிடித்தே ஆக வேண்டும் என்கிற உத்தேசத்தில்... அப்போது கர்த்தார் சிங் சைட்டுக்கு வருவதாக இருந்தது. அவனுடன் உஜாகர் சிங்காக வந்தேன். கருப்பாயி, டீக்கடைக்காரப் பையன் மூலம் மெல்ல மெல்ல உண்மை தெளிவாகியது.

''இன்ஸ்பெக்டர் ஷண்முகமும் பூசாரியும் இதில் சம்பந்தப்பட்டிருப்பது தெரிந்து, பூசாரியை நேரில் பார்த்தேன். அவனிடம், 'நீ செய்த குற்றம் வெளியே தெரியாமல் தப்பிக்க ஒரே வழிதான் இருக்



கிறது. நான் சொன்னதுக்குச் சம்மதிக்க வேண்டும். முனீஸ்வரனை முதலில் மரத்திலிருந்து இடம் மாற்ற வேண்டும்' என்றேன். அதற்கு வழி சொன்னான்.

கிராமத்தில் யாருக்காவது ஆவேசம் வந்து - அதற்கு முன் ஒரு தெய்வச் செயல் நடந்து போய், ஆவேசம் வந்து - முனீஸ்வரன் சிலை புதைந்திருப்பது கண்டுபிடித்தால்தான் இடம் மாற்ற முடியும்' என்று சொன்னான்.

''அதற்காக ப்ரமிளாவை மூன்று தினம் நீ 'சைட்'டுக்குப் போயிருக்கும் போது சந்தித்தேன். அவளுக்குச் சொல்லிக் கொடுத்தேன். ரொம்ப அழகாகவே செய்தாள். அவளுக்கு நல்ல படிப்புத் திறமை இருக்கிறது. பூசாரி சொல்லிக் கொடுத்த பாடல்களை மனப்பாடம் பண்ணி...''

மொட்டை மாடியிலிருந்து நித்யா, டிஸி, எஸ்பி மற்றவர்களுடன் பேசிக் கொண்டிருந்த ப்ரமிளாவை இருவரும் பார்த்தார்கள். உன் மனைவி முட்டாளல்ல. தியேட்டர் அனுபவம் இருக்கிறது. அவளுக்குச் சொல்லிக் கொடுத்ததை வரி பிசகாமல் செய்தாள்.

''மண்டபத்தில் சிலை?''

''முன்னாலேயே திட்டமிட்டுப் புதைத்த சிலை. சென்னையில் வாங்கினேன் பூம்புகாரில்.''

''மைகாட்'' என்றான் மனோஜ்.

''இல்லையெனில் மரத்தை வெட்டியிருக்க முடியாது. இப்போது மரமும் வெட்டப்பட்டது. ஸாட்டிலைட்டும் வைக்கப்பட்டது. முனீஸ்வரனும் புதிய இடத்தில் உபத்திரவமில்லாத தூரத்தில் பக்த தரிசனம் கொடுத்துக் கொண்டிருக்கிறார். தட்ஸ்ஸிட்.எல்லாருக்கும் சந்தோஷம்.''

''ஆனால் அந்த செல்வியைக் கொன்றவர்கள் தண்டனையில்லாமல் தப்பிக்கிறார்களே?''

''இல்லை. நான் இதைப் பற்றி ஒரு புகார் எழுதி, ஸிபிஐக்கு அனுப்பியுள்ளேன். அவர்கள் பதிலும் கொடுத்திருக்கிறார்கள்.''

ஷன்பேகர் டெலக்ஸ் செய்தியைப் பையிலிருந்து எடுத்துக் காட்டினான்.

''உங்கள் புகார்க் கடிதம் கிடைத்தது. டிப்பார்ட்மெண்ட்டை சேர்ந்த ஓர் அதிகாரி வெள்ளிக்கிழமை பத்தொன்பதாம் தேதி வள்ளிக்குப்பம் கிராமத்துக்கு வருகிறார். அப்போது ஆரம்ப விசாரிப்புக்கான தகவல்களைத் தரவும்.''

''என்ன ஆகும்?''

''சட்டம் தீர்மானிக்கட்டும். நம்மைப் பொறுத்தவரை ஸாட்டிலைட் வைத்து விட்டோம். மரத்தை அகற்றி விட்டோம்.''

''இருந்தாலும் என்னையும் சேர்த்து ஏமாற்றி விட்டாயே அதுதான் பொறுக்கவில்லை.''

''நீ இதற்குச் சம்மதிப்பாயோ என்று

சுஜாதா

சந்தேகமாக இருந்தது. மேலும் ப்ரமிளா தான் உன்னிடம் சொல்ல வேண்டாம் என்று கேட்டுக் கொண்டாள்.''

''ராட்சசி!''

ராத்திரி அறையில் அவன் மவுன மாகப் படுத்துக் கொண்டிருந்த போது ப்ரமிளா அவன் முதுகைத் தொட்டாள், ''கோபமா?''

''ஆமாம்.''

''எல்லாம் நல்லபடியா நடக்க லையா?''

''எ ங் கி ட் ட சொல்லியிருக்கலா மில்லை?''

''ஆமாம். சொல்லாதது தப்புத்தான்.''

''எதுக்காக என்னையும் சேர்த்து ஏமாற்றினே?''

ப்ரமிளா அவனை நேராகப் பார்த்து, ''எனக்கென்னவோ அப்படி செய்தா ஒரு விதத்தில் என் திறமையை உங்களுக்கு நிரு பிச்சுக் காட்ட ஒரு சந்தர்ப்பம்னு தோணித்து. நான் நினைக்கறது தப்பா இருக்கலாம். ஆனா மனோஜ், கல்யாணம் ஆனதிலிருந்தே என்னைப் பற்றி உனக்குத் தாழ்வான அபிப்ராயம். இது ஒரு முட்டாள். சினிமா பத்திரிகையைத் தவிர எதுவுமே படிக்காது. இது ஒரு பூச்சின்னு அபிப்ராயம்... அப்படித்தான் உன் பேச்சி லிருந்து தெரிஞ்சது.''

''சேசே! அப்படி நான் நினைக்கவே இல்லை.''

''என் கண்ணைப் பார்த்துச் சொல்லு, அப்படி நினைக்கவே இல்லைன்னு...''

சில செகண்டுகளுக்கு அவன் கண்ணை நேராகப் பார்த்தான். முதலில் கடுமையாக இருந்த முகம், இறுகல் விலகி, புன்னகை யாக, சிரிப்பாக மாற...

''தட்ஸ் ட்ரு. பைத்தியம்னுதான் நினைச்சேன் உன்னை.''

''ஃபேமலியே நட்டுன்னு அடிக்கடி சொல்லிக்கிட்டு இருந்தீங்க!''

''இப்ப நான்தான் நட்டு. என்னை எல் லாரும் ஏமாற்றிட்டீங்க.''

''எல்லாம் நல்லதுக்குத்தான்.''

''என்ன நல்லது?''

''இதான்'' என்று அவன் உதட்டில் ஒரு முத்தம் பதித்தாள்.

''கிராம்பு வாசனை'' என்றான்.

''நித்யாதான் கொடுத்தா, பிரசாதம்.''

அவளை இறுக்க அணைத்துக் கொள் ளும் போது ''ஜாக்கிரதை'' என்றாள்.

''ஏன்?''

''பாப்பா.''

வெள்ளிக்கிழமை ஏதோ விசாகம் என்று முனீஸ்வரன் கோவிலில் அபிஷேகம் என்று, காலையிலிருந்து சனங்கள் கூடிக் கொண்டிருந்தார்கள். ஷண்பேகரும் மனோ ஜ~ம் சைட்டுக்கு போயிருந்தார்கள். முதன் முதல் டம்மி லோடிலிருந்து அன்டெனாவுக்கு பவர் கொடுத்து டெஸ்ட் ட்ரான்ஸ்மிஷன் செய்தார்கள். அன் டென்னா பாட்டர்ன் எல்லாம் சரியாக இருந்தது. சிஸ்டம் வால்யும் நாய்ஸ் ஃபிகர் எல்லாம் சரியாக இருக்கச் சுமார் ஒன்ப தாயிரம் சானல்களை ஒன்று சேர்த்து, டெலிவிஷன் திரையில் கிரிக்கெட் தெரிந் தது. ஷண்பேகரும் மனோஜ~ம் கை குலுக்கிக் கொண்டார்கள். ஷண்பேகர் கருப்பாயியின் தோளில் கை போட்டுக் கொண்டு பியர் குடித்தான். டீக்கடைக் காரப் பையன் மானிட்டரைக் கண் கொட் டாமல் பார்த்துக் கொண்டிருக்க, ''கருப் பாயி ரிடர்ன் கீ'' என்றான்.

கருப்பாயி அதன் கணிப்பொறியின் விசைப் பலகையில் மெதுவாக 'ரிட்டர்ன் கீ'யைத் தட்ட, 'மெனு' வந்தது.

''அதுக்குப் பேரு என்ன கருப்பாயி?'' என்றான் மனோஜ்.

''மெனுங்க. அதில சிஸ்டம் பூட் 'பி'யை தொட்டா போதும்னு சொல்லிக் கொடுத்திருக்காருங்க.''

''மைகாட்! ஷண், யு ஆர் இம்பா ஸிபிள்.''

''அடுத்தது டீக்கடைக்காரப் பைய னுக்கு ட்ரெய்னிங்.''

''முதல்ல அவனுக்கு ஒரு நல்ல சட்டை'' என்றான் மனோஜ்.

ஷண்பேகர் பியரைக் குடித்து விட்டு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு, இந்த பாரத நாடு என்ன ஒரு ஆச்சரியம் பாரு! கருப்பாயி, முருகன் போல கரிய கண்க ளுடைய நம் சிறுவர், சிறுமியர்களிடம் இத்தனை திறமை இருக்கு. அவர்களை ஆடு, மாடு மேய்க்க அனுப்புகிறோம். உலகத்திலேயே மிக நவீனமாக ஸாட்டி

''ஒரு வருஷமா நம்ம ஊரில் தங்கி எல்லோருக்கும் குறி சொல்லிக்கிட்டிருந்த சாமியார் ஊரை விட்டே ஓடினதுக்கு நம்ம குப்புசாமிதாங்க காரணம்!''

''அப்படியா?''

''ஊம்... அவர்கிட்டே போய், காவிரிப் பிரச்னை எப்பத் தீரும்னு கேட்டுத் தொலைச்சிருக்கார்!''

- வேதபுரி எஸ். ரமேஷ்



## தீரன் சின்னமலை



''கொங்கு நாட்டார் எதற்காக மைசூருக்குத் திறை செலுத்துவது?'' என்று கூறி, மைசூருக்குச் சென்று வரிப்பணத்தை நிறுத்திவிட்டு, மைசூர் ஆட்சியை எதிர்த்தவர், தீரன் சின்னமலை.

பெரியார் மாவட்டத்தில், நொய்யல் ஆற்றங்கரையில் உள்ள மேலப்பாளையம் என்ற இடத்தில் 1756 ஆம் ஆண்டு பிறந்தவர். ஈரோடு - காங்கேயம் சாலையில் அறச்சலூர் இருக்கிறது. அறச்சலூரிலிருந்து தென்கிழக்கில், சுமார் ஐந்து மைல் தூரத்தில் ஓடாநிலை என்ற பகுதியை ஆண்ட குறுநில மன்னர் தீரன் சின்னமலை.

மைசூர் ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பிறகு, தமிழகத்தில் கொங்குப் பகுதியில் 1801 முதல் 1805 வரை ஆங்கிலேயப் படையை நமது பகுதிக்குள் நுழைய விடாமல் தடுத்து வீரப் போர் புரிந்தவர். இறுதியாக ஆங்கிலேயர் மறைமுகமாகத் தந்திரத்தைக் கையாண்டு, அவரைச் சிறை பிடித்தனர். பின்னர் சங்ககிரிக் கோட்டையில் அவரைத் தூக்கிலிட்டனர்.

- **ஆதாரம் : பெரியார் மாவட்ட வரலாற்று ஆவண ஆய்வுக்குழு செய்தி மலர், ஜூன் 91 இதழ்**

**(மாவட்ட ஆட்சி அலுவலகக் கட்டடமே இன்று சின்னமலையின் பெயரைத் தாங்கித்தான் இருக்கிறது, ஈரோட்டில்.)**

லைட் எர்த் ஸ்டேஷன் பக்கத்தில் மூடநம்பிக்கையின் சிகரமாக முனீஸ்வரன், தெய்வம் என்ற பேரில் பயத்தையும் முட்டாள் தனத்தையும் பொட்டலம் கட்டி விற்கிறோம். ஒருபுறம் சோற்றுக்கில்லா ஏழைமை. மற்றொரு இடத்தில் அதீத செல்வச் சிறப்பின் தீவுகள். எனக்குப் புரியவே இல்லை.''

ப்ரமிளா, ''ஷண் நான் ஒரு கவிதை படிச்சேன் சமீபத்தில...''

''என்ன?''

''கிராமத்தில் கூட கம்ப்யூட்டர் வந்து விட்டது.

சந்தோஷம்.

ஏழைகளின் எண்ணிக்கையைத் துல்லியமாகக் கணக்கிட முடிகிறது.

கிராமத்தில் கூட கலர் டி. வி. வந்து விட்டது.

சந்தோஷம்.

டில்லியில் சிந்தும் ரத்தம் நெல்லை யில் தெரிகிறது.''

மனோஜ், ஷண்பேகருக்கு மொழி பெயர்த்துச் சொன்னான்.

''சபாஷ்! மனோஜ் நௌ யு நோ யுவர் வைஃப்.''

''ஆமாம் ஒரு விஷயம் கேட்க மறந்து விட்டேன். டோட்டு எப்படி உயிரோடு வந்தது?''

''கமான் மனோஜ், யு ஆர் நாட் தட் ஸ்டுபிட்?''

''பம்பாய் போய்த் திரும்பி வரப்ப வேற நாய் கொண்டு வந்தியா?''

''ஆமாம். டோட்டுவை பெத்த நாயோட அடுத்த ஈடு. அதிலிருந்து அது மாதிரியே ஒண்ணு பொறுக்கிக் கொண்டு வந்து உன் ரூம் வாசலில் விட்டு விட்டேன்.''

''அடேய் ஷண்பேக்கா இன்னும் எத்தனை ஏமாற்றப் போறே? சொல்லிடு'' என்று அவன் முதுகில் பலமாகவே குத்தினான்.

**சா**யங்காலம் அனைவரும் கோவிலுக்குப் போயிருந்தார்கள். மண்டபத்திலிருந்து தூரத்தில் ஸாட்டிலைட்டின் அன்டென்னா உயரத்தில் தெரிந்தது. பக்தர்கள் பூசாரியிடம் குங்குமம், சந்தனம், விபூதியெல்லாம் வாங்கிக் கொண்டு போனார்கள். கைக் குழந்தைகளுக்கு ஓர் ஓரத்தில் தாயத்து கட்டிக் கொண்டிருந்தார்கள். மற்றொரு ஓரத்தில் பயந்தவர்களுக்கு வேப்பிலை அடித்துக் கொண்டிருந்தார்கள். அர்ச்சனை டிக்கெட், அபிஷேக டிக்கெட் என்று விற்பனை பெருகிக் கொண்டிருந்தது.

ஷண்பேகரைத் தேடிக் கொண்டு ஒருவர் வந்திருந்தார்.

''மிஸ்டர் ஷண்பேகர்...''

''எஸ்.''

''நான் ஸி.பி.ஐ.யிலிருந்து வந்திருக்கிறேன். உங்கள் கடிதம் கிடைத்தது...''

''வெல்கம்! உங்களுக்காகத்தான் காத்திருக்கிறோம். கதையை முடிப்பதற்கு. உங்கள் பெயர்?''

''இன்ஸ்பெக்டர் முன்சாமி.''

**(முற்றும்)**

போட்டிக் கதை - 19

# நிறைவு

# வென்ற நிஜம்

கிராமம் விழித்துக் கொண்டது. நீள மான தெருக்களில் பெண்கள் வாசல்நடை யைக் கூட்டிக் கொண்டிருந்தனர். பக்கத்தில் உள்ள, தடுப்புக் கட்டப்பட்ட ஊர்க் கிணற் றில் பெண்கள் சண்டை போடாமல் நீர் இறைத்துக் கொண்டிருந்தனர்.

ஆடுகள் மேயக் கிளம்பின.

கண்ணை விட்டுக் கொஞ்ச தூரம் தள்ளிப் போயிருந்த ஓர் ஆட்டைக் கல் எடுத்துக் கொண்டு குறிபார்த்து வீசித் தன் பக்கம் திரும்பினான் சிறுவன்.

அப்போது அந்தச் சாலையில் சிவப் பான மாருதி கார் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய நபர் அந்த அதி காலையிலேயே தொப்பியுடன், கறுப்பான கூலிங்கிளாஸ் போட்டிருந்தான். அவன் சிறுவனைக் கைகாட்டி அழைத்தான். வந்தான்.

''சின்ன முட்டம்.. ஊர் இதானே.. பையா?''

''ஆமாங்கய்யா...!''

''பெரியசாமி தெரியுமா? எம். எல். ஏ.வா இருந்தார்..''

''பெரிய ஐயாவுங்க அவரு.. தெரியு மாவா?'' சிறுவன் நாக்கை வளைத்துப் பேசினான்.

''சரி.. அவர் வீடு எது...?''

''அந்தா மாட்டைப் படுக்க வைச்சு லாடம் அடிக்கிறாங்கல்ல. அதுக்கு எதிர்த் தாக்குல வெள்ளை வீடு இருக்குதே அது தான்...''

''இருக்காரா...?''

''இருக்காரு... நீங்க யாருய்யா...?''

''படம்... சினிமா... எடுக்க வந்திருக் கேன்...''

சிறுவன் ஒரு குதி குதித்தான். மாருதி கார் கிளம்ப, அதன் பின்னால் பொய்க் கார் ஒன்றை ஓட்டிக் கொண்டு வந்தான். அவ னுக்குள்ளே உல்லாசம். அவனால் ஓட்டி வரப்பட்ட ஆடுகள் ஒரு மட்டம் தலை யைத் தூக்கிப் பார்த்து விட்டு மீண்டும் மேய ஆரம்பித்தன.

மாருதி, பெரியசாமியின் வீட்டின் முன் னால் நின்றது. கண்ணாடி போட்ட நபர் இறங்கி உள்ளே போனான்.

பெரியசாமி, காரையும் காரிலிருந்து இறங்கி வரும் நபரையும் புரியாதவண்ணம் பார்த்தார். கண்ணாடிக்காரன் ஆரம்பித் தான்.

''நான் யார்னு உங்களுக்குத் தெரியாது. டைரக்டர் மணிராஜாவோட உதவியாளன். போன வருஷம் இதே நேரம் அவரோட 'பண முதலைகள்' படம் ஷூட்டிங் இங்கே நடந்ததாம். நீங்க ரொம்ப உதவி னீங்களாம்...''

''மணிராஜா வரலையா...?'' பெரிய சாமி சிரிக்கலானார்.

''வந்திருக்கிறார். அவரோடு முன் னணி நடிகர் விமல்ராஜ், நடிகை ரத்னா தேவி... எல்லோரும் இன்னும் இரண்டு மணி நேரத்துல வருவாங்க. நாகர்கோவில் பிரெசிடென்ட் ஓட்டல்ல ரூம்ஸ் போட் டிருக்கோம். உங்களை நாடினால் உதவு வீர்கள் என அவர் சொன்னார்...''

''அப்படியே... ஆகட்டும். எலே... முருகா... நாற்காலி ரெண்டு எடுத்து வெளியே போடு...''

அவன் நொடிப் பொழுதில் இரண்டு மர நாற்காலிகளைக் கொண்டு வந்து போட்டான். ''மிஸ்டர் பெரியசாமி.. மணி ராஜா இப்ப எடுக்கிறது சண்டைப் படம். கிராமத்துக் கதாநாயகன். ஒரு பூக்கடையில் சண்டை நடக்கிற மாதிரி ஏற்பாடு...''

''நான் என்ன பண்ணனும் சொல் லுங்க உதவறேன்...''

''பூக்கடை ஒன்று ஏற்பாடு பண்ண ணும்.. எவ்வளவு சேதமோ அதைவிட டபுள் மடங்கு பணம் தந்துடுவோம்...''

''பணம் பிரச்னை இல்லை. ஒரே பூக்கடைதான் இருக்குது. அவன் சொன்ன வுடனேயே கேட்பான். போன தடவை

கூட இதே கடை முன்னால டப்பாங் குத்துப் பாட்டு எடுத்தார்...''

''உங்கிட்டே விவரம் சொல்லத்தான் என்னை முதல்ல அனுப்பினார் மணி ராஜா...''

''இது முடிஞ்சதுன்னு வெச்சுக்கங்க... அப்புறம்...?''

''அப்புறம்... கொஞ்சம் இளநி ஏற் பாடு பண்ணிடுங்க.. வெயில் கொளுத் தும்...''

''கவலைப்படாதீங்க... என்னோட தோட்டத்திலிருந்தே வரும்.''

''மணிராஜாவும் சொன்னார். உங்க ளுக்கே தெரியும்னு..''

**ச**ரியாக ஒன்பது மணிக்குக் காக்கா முட்டைக் கலர் கார் ஒன்றும், மஞ்சள் கல ரில் பஸ் ஒன்றும் வந்து ஆலமர நிழலில் நின்றன. பந்தாவே இல்லாத டைரக்டர் மணிராஜா காரிலிருந்து இறங்கிப் பெரிய சாமி வீட்டை நோக்கி வந்தார். பெரியசாமி எதிர்நோக்கி வரவே இருவரும் கட்டித் தழுவிக் கொண்டனர்.

''நிறையப் பேச டைம் இல்லை. பெரிய நடிகர். விமல்ராஜ் தெரியுமில்லை. காருக்குள்ள இருக்கார். படம் கிராமியப் படம். இன்னிக்கு முழுவதும் ஃபைட் சீன்தான். பூக்கடையைப் பின்னணியாக கொண்டு ஃபைட் சீன்...''

''பூக்கடை செட் செய்துட்டோம்...''

''பெரியசாமி... இயற்கை வேணும். சண்டை நடக்கும் போது எங்க துணை நடிகர்களும் நிற்பாங்க. அதே நேரம் ஊர் மக்கள் கூட்டம் வேணும்... நேச்சுரலா எடுக்கத்தான் இங்கே வந்தேன்.. அப்புறம்.. திடீர்னு ஓர் ஐடியா...''

''என்ன...?''

''வர்ற வழியிலே.. ஒரு கோயில் இருக்குதில்ல... அது பக்கத்தில் நிறைய



மண்பானைகள் அடுக்கி வச்சிருக்குது...''

''குயவன் பட்டறை இருக்குது...''

''ஆம்... அந்த பானையெல்லாம் கொண்டு வரணும்... ஓர் இந்தி படத்துல அமிதாப் அடிப்பார்.. வில்லன் பானை மேல் போய் விழ புல்லரிக்கும்.''

''கேளுங்க.. தருவாங்க... உள்ள பணம் கொடுத்திட வேண்டியதுதானே.''

''பணம் பிரச்னை இல்லை. பரமா.. போ.. எப்படி கொண்டு வரே...?''

''வண்டி வச்சிருக்காங்க... அனுப்பு வானுக..''

''போ பரமா.. கொண்டு வா.. வரிசையா அடுக்கி வச்சு, சண்டை சீன் எடுத்தால் சூப்பரா அமையும். ஒரு பாட்டு சீனே எடுக்கலாம். 'டோபா'வுல ஜிதேந்திராவும்.. ஸ்ரீதேவியும் ஆடுவாங்களே...''

அந்த அசிஸ்டெண்ட் டைரக்டர் சிவப்பு நிற மாருதியைக் கிளப்பிக் கொண்டு டைரக்டர் சொன்ன ஸ்தலம் வந்தார். தென்னை ஓலையால் வேயப்பட்ட இரண்டு குடிசைகள் அமைதியாகத் தெரிந்தன. ஒரு வயதான கிழவர் வெற்றிலைச் சீவலை வாயில் போட்டுக் குதப்பிக் கொண்டிருந்தார். கார் வந்து நின்றதும் மரியாதைக்காக எழுந்தார்.

''எனக்குப் பானை வேணும் பெரியவரே...''

''எத்தனை... எப்ப வேணும்...?''

''பத்து மணிக்கு ஷூட்டிங்க்கு வேணும்...''

''ஷூட்டிங்கா...?'' கண்களை விரித்தார் பெரியவர்.

''ஆமா... சினிமாப் படம் எடுக்கப் போறோம்...''

''சினிமாக்காரனுக்குத் தர மாட்டோம்... போயிடுங்க...''

''ஏன் பெரியவரே...?''

''உடைப்பீங்க. முன்னால ஒருக்கா... நாலு வருஷம் ஆச்சு. லாரி நிறைய குவிச்சுட்டுப் போனாங்க... பெரிய கோவில் முன்னாடி போட்டு உடைச்சு உடைச்சுச் சண்டை போட்டுப் படமெடுத்தாங்க... அதே போலவா...?''

''ஆமா...''

''கிடைக்காது. போயிடுங்க...'' உக்கிரமானார் கிழவர்.

''பெரியவரே... இதுக்கு எவ்வளவு பணம் கேட்டாலும் நான் உங்களுக்கு வாங்கித் தர்றேன். பத்து மணிக்குள்ள தயாரா வைக்கணும். டைரக்டர் கோபமாயிடுவார்...''

''நான் சொன்னதுதான்.. தர மாட்டேன்...''

அசிஸ்டெண்ட் ஏமாந்த முகத்தோடு திரும்பிய நேரம், எதிரே பெரியவரின் மகன் வீரனும், மருமகள் செல்லம்மாவும் மண் சுமந்து கொண்டு வந்தார்கள். வீரன் பேண்ட், ஷர்ட் ஆசாமியை விநோதமாகப் பார்த்தான். தந்தையையும் பார்த்தான்.

''என்ன வேணும் சாமி...?'' கேட்டான்.

''பானைகள் வேணும்...'' அசிஸ்டெண்ட் சொன்னான்.

''எத்தனை வேணும்...?''

''இதில் எத்தனை இருக்குது...?''

''ரெண்டாயிரத்து நூறு இருக்குது...''

''அத்தனையும் வேணும்...''

''என்ன சாமி விளையாட்டுக் காட்டறீங்க...'' சிரித்தான் வீரன்.

''நான் விளையாடலய்யா... எனக்கு இப்ப உடனடியா வேணும்... பத்து மணிக்குப் பழக்கடை முன்னாடி அடுக்கணும்...''

''எதுக்கு...?''

''படம் எடுக்கறோம். சினிமா. பானைகள் தேவைப்படுது. அந்தக் கிழவர் தர மாட்டோம்னு கிராக்கி பண்றார்...''

''வேத்து ஆளுங்களுக்கு உள்ளது சாமி...''

''அவங்க தர்றதை விட நாலு மடங்கு அதிகமாத் தர்றேன். பானைகளைக் கொடுத்துடு...''



''ஏம்பா, இப்படி வீடு வீடா வந்து பிச்சையெடுக்க உனக்கு வெட்கமாயில்லை?''

''என்னங்க செய்யறது? என் வீடு தேடி வந்து பிச்சை போடணும்கிற தர்மசிந்தனை நம்ம ஜனங்களுக்கு இல்லையே!''

- இ. ராஜு

''எவ்வளவு போட்டுக் கொடுப்பீங்க...?''

''ஒரு பானை என்ன விலைன்னு கொடுப்பே..?''

''மூணு ரூபாக்குக் கொடுப்பேன்...''

''ஒரு பானை அஞ்சு ரூபா. ரெண்டாயிரம் பானை வேணும். வண்டி இருக்குதா...?''

''இருக்குது...''

''பூக்கடை இருக்குதில்ல. பெரியசாமி வீட்டு முன்னாடி... அங்கே கொண்டு வந்துடு. வண்டிக்கு வாடகை தனியா நூறு ரூபா தர்றேன்...''

''சரிங்க எஜமான்...''

''அந்தக் கிழவர்...?'' அசிஸ்டெண்ட் கேள்விக்குறி எழுப்பினான்.

''அது என்னோட அப்பன்தான்... பணம் கொடுத்துடுவியளா...?''

''இந்தா ஆயிரம்.. மீதி புரொடக்ஷன் மானேஜர்கிட்ட வாங்கித் தர்றேன்...''

அசிஸ்டெண்ட் பேண்ட் பாக்கெட்டிலிருந்து கத்தையான பத்து ரூபாய்க் கட்டு ஒன்றைக் கொடுக்க, அதை கைநீட்டி வாங்க எண்ணி, கையை உயர்த்தின வீரனை, அதட்டியவாறே அவன் கையைத் தட்டினார் பெரியவர்.

''வீரா... வேண்டாம் பணம். ரெண்டாயிரம் பானைக்கு நாளைன்னிக்கு மணி கண்டத்தேவர் டெம்போ கொண்டு வருவார். அவருக்கு என்ன பண்ணுவே...?''

''அந்த ஆள் மூணு ரூபா தருவான். இவரு ரெண்டு ரூபா சேர்த்துத் தரார்... நாலாயிரம் லாபம்...''

''நாலாயிரம் லாபம். நாலு மாசமா உழைச்சு உருவாக்கினது. தேவர்கிட்ட ஆயிரம் அப்பவே வாங்கிட்டே.... கவனம் வச்சுக்க...''

''வந்தால்... ப ண ம் கொடுத்திடலாம்...''

''வீரா வேண்டாம்... எனக்கு ஒப்பு இல்லை. நான் சம்மதிக்க மாட்டேன்... ஏ.. தொப்பிக்காரா... உன்னைப் போகச் சொன்னேனில்லை.. இங்கே இனி கொலை விழும்...''

''அப்பாரு.. இது தேவைக்கில்லாத சண்டை. நாலு மாசமா ராப்பகலாத் தலை கீழே நின்னு புனைஞ்சது. நாலாயிரம் கூட்டி வரும் போது விடலாமா... மணி கண்டர் வந்தால் ஒரு மாச காலத்துல புனைஞ்சு அதே ரெண்டாயிரம் பானை தந்துட்டாப் போச்சு...''

வீரன் கையை ஆட்டி ஆட்டித் தந்தையிடம் நியாயம் பேசினான். அவரோ கேட்பதாகத் தெரியவில்லை.



# வடசென்னையை அலச வருகிறோம்!

**செ**ன்னை தமிழகத்தின் தலை நகராக இருந்தாலும் கூட இங்கும் பிரச்னைகள் இல்லாமல் இல்லை. அடிப்படைப் பிரச்னைகள் கூடச் சரிவரத் தீர்க்கப்படாத நகரம்தான் சென்னை.

எனவே, கல்கியின் 'மாதம் ஒரு நகரம்' என்ற திட்டத்தின் கீழ் மூன்றாவது நகராகச் சென்னையைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். எனினும் ஒரே இதழில் சென்னை நகரம் முழுவதையும் சுற்றிப் பார்த்து எழுத இயலாது என்பதால் முதலில் வடசென்னைப் பகுதியை மட்டும் எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

வட சென்னையிலுள்ள அனைவரும் தங்கள் பகுதியிலுள்ள குறைகள், நிறைகள், சாதனை யாளர்கள், தங்கள் பகுதியின் முன்னேற்றத்துக்கான திட்டங்கள் ஆகியவற்றைச் சுருக்கமாக எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

**வடசென்னைவாசிகளின் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 9.1.92.**

உடனடியாக எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

**- ஆசிரியர்.**

# பெரியாரைப் பேச விடுங்கள்!



பெரியார் பிறந்த வீடு - பெரியாரிடம் வேலை பார்த்தபோது அண்ணா தங்கியிருந்த வீடு - இவற்றை செய்தி - மக்கள் தொடர்புத்துறையினர் மிக சுத்தமாக வைத்திருக்கிறார்கள். ஏராளமான புகைப்படங்கள் சரித்திரம் பேசுகின்றன. பெரியார் உபயோகித்த பொருள்கள் பாதுகாக்கப்படுகின்றன. விளக்க உரை வழங்க விஷய ஞானமுள்ள கைடுகளும் உண்டு. ஆனால், அங்குள்ள பார்வையாளர்கள் குறிப்புப் புத்தகத்தில் பலரும் 'பெரியாரின் பேச்சுக்கள் அடங்கிய ஒலிப்பதிவு நாடாக்களை ஒலிக்கச் செய்தால் இன்னும் சிறப்பாக இருக்கும்' என்று நல்லதொரு யோசனையை எழுதி வைத்திருக்கிறார்கள். பெரியாரின் சீடப் பிள்ளைகள் யாரும் இந்த ஓர் அம்சத்தைக் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை; 'அது கிடக்கட்டும் வெங்காயம்' என்று விட்டுவிட மாட்டார்கள் என்று நம்புகிறோம்!

---

இந்தக் குழப்பமான சூழ்நிலையில் அசிஸ்டெண்ட் டைரக்டர் போய் விட்டான்.

வீரன் பெரியவரை வாய்க்கு வந்தபடி திட்டித் தீர்க்கலானான். செல்லம்மா விநோதமாகப் பார்த்துக் கொண்டு வீட்டுக்குள் சென்றாள். பெரியவர் பானைகள் கொடுக்கப்படவில்லை என்றவுடன் உள்ள உவப்பினால், வீரனின் ஏச்சுக்களைக் கண்டுகொள்ளவேயில்லை. செல்லம்மா இரண்டு பெரிய வெங்கல தம்ளர் நிறைய மோர் கொண்டு வந்து ஆளுக்கொன்று கொடுத்தாள். பெரியவரிடம் கேட்டாள்.

''ஏன் பானையை சினிமா ஆளுக்குக் கொடுக்கக் கூடாது மாமா...?''

''அவனுக அதை உடைப்பானுக.. நாலு வருஷத்துக்கு முதல்ல இதே மாதிரி கேட்டாங்க. கொடுத்தேன். சாயந்தரம் போய்ப் பார்க்கிறேன்.. எல்லாப் பானையும்... ஓடாயிடுச்சு பெரிய கோவில் வளாகத்துல கிடக்குது. எனக்கு அப்படியே அழுகை வந்துட்டுது செல்லம்மா. எட்டு நாளாத் தூங்கலை.. அந்தப் பானைகளைப் புனைய மூணு மாசம் ஆயிருந்துச்சு. எல்லாத்தையும் ஒரே நாளையில ஓடு ஓடா மாத்திட்டாங்க. தொண்ணூறு நாள் நான் உழைச்ச உழைப்புப் போய்ட்டுதே.. பணம் என்ன பணம் செல்லம்மா.. செட்டியார் ஊட்டு அம்மாவும், ஐயர் ஊட்டு அம்மாவும்... 'முத்தையா உன் மண்பானை எவ்வளவு காலம் வருது. உன் பானையில் தண்ணீர் வச்சுக் குடிச்சால்... வெயில் பறக்கும். தேன் மாதிரி இருக்குது. நாளைக்கு இன்னும் ஒரு பானை கொண்டு வா'ன்னு சொல்லும்போதே... உலகமே நம்ம காலடிக்குள்ளே வந்த பெருமை... சுகம்... செல்லம்மா.. இதை விட்டுட்டு மொத்தமா உடைஞ்சு போறதைப் பார்க்கறது கொலை விழுந்த மாதிரி... அன்னிக்கு ஏதோ ஒரு மரணத்தைச் சந்திச்ச மாதிரி இருந்துச்சு...''

குயவன் ஒரு படைப்பாளி. பெரியவர் முத்தையா அந்த சுகத்தினைக் கண்டவர்.

பெரியவர் முத்தையா, வீரன் பக்கம் திரும்பினார். ''வீரா... நீ ஒரு சிற்பிடா. உன்னையே நீ முதல்ல புரிஞ்சுக்க. கஷ்டப்பட்டுச் செதுக்கின உருவத்தை உடைக்க விடுவானா.. சிற்பி. செத்துடுவான். நாமும் பிரம்மன் போல வீரா... இன்னிக்கு ஐயர் ஊடு, தேவர் ஊடு, செட்டியார் ஊடுன்னு நம்ம பானை பெயர் சொல்லுது. அது பெருமை. அந்த பெருமை வேணும். பணம் என்னடா பெரிய பணம்...'' என்று சொன்ன பெரியவரைப் புதிதாகப் பார்ப்பவன் போல் பார்த்தான் வீரன்.

# சிவகாமியின் சபதம்

## முப்பத்து மூன்றாம் அத்தியாயம்

## இருள் சூழ்ந்தது

மாமல்லர் அன்று ஆயனரின் அரண்ய வீட்டிலிருந்து புறப்பட்டுக் காஞ்சி நகரை நோக்கிச் சென்றபோது உச்சி நேரம். நிர்மலமான நீல ஆகாயத்தில் புரட்டாசி மாதத்துச் சூரியன் தலைக்கு மேலே தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்தான். ஆயினும் மாமல்ல நரசிம்மருக்கு அப்போது வானமும் பூமியும் இருள் சூழ்ந்திருந்ததாகத் தோன்றியது. அமாவாசை நள்ளிரவில் நாலாபுறமும் வானத்தில் கன்னங்கரிய மேகங்கள் திரண்டிருந்தாற் போன்ற அந்தகாரம் அவர் உள்ளத்தைக் கவிந்து கொண்டிருந்தது. ஒரு சின்னஞ்சிறு நட்சத்திரத்தின் மினுக் மினுக் என்னும் ஒளிக் கிரணத்தைக் கூட அந்தக் காரிருளில் அவர் காணவில்லை.

ஆனால் திடீர் திடீர் என்று சில சமயம் பேரிடி முழக்கத்துடன் கூடிய மின்னல்கள் - கீழ்வான முகட்டிலிருந்து மேல்வான முகடு வரையில் அந்தகாரத்தைக் கிழித்துக் கொண்டு பாய்ந்த மின்னல்கள் - கண்ணைப் பறித்து மண்டையைப் பிளக்கும் பயங்கரத் தீட்சண்ய ஒளி மின்னல்கள் - மாமல்லருடைய உள்ளமாகிற வானத்தில் தோன்றத்தான் செய்தன. அந்த மின்னல் ஒளியெல்லாம் ஆயிரமாயிரம் கூரிய வாள்களும் வேல்களும் போர்க்களத்தில் ஒன்றோடொன்று உராயும் போது சுடர்விட்டு ஒளிர்ந்து மறையும் மின்னல்களாகவே அவருடைய அகக்காட்சியில் தோற்றமளித்தன.

சிவகாமி அடியோடு நஷ்டமாகி விட்டதாகவே மாமல்லர் எண்ணினார். சளுக்கரால் சிறைப்பட்டுச் சிவகாமி உயிர் வாழ்ந்திருப்பாள் என்று அவரால் கற்பனை செய்யவே முடியவில்லை.

சிறைப்பட்டுச் சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் பிராணனை விட்டுத்தான் இருக்க வேண்டும். கேவலம் மற்றச் சாமான்யப் பெண்களைப் போல் அவள் சத்ருக்கள் வசம் சிக்கிக் கொண்ட பிறகு உயிரை வைத்துக் கொண்டிருப்பாளா? மானத்தைக் காட்டிலும் பிராணனே பெரிது என்று எண்ணும் ஈனத்தனம் சிவகாமியிடம் இருக்க முடியுமா?

தன்னுடைய வாழ்க்கையிலிருந்தும் இந்தப் பூலோகத்திலிருந்தும் அந்தத் தெய்வீக ஒளிச்சுடர் முடிவாக மறைந்தே போய் விட்டது. அத்தகைய தெய்வீக சௌந்தர்யத்துக்கும் கலைத்திறனுக்கும் மேன்மைக் குணத்துக்கும் இந்த உலகம் தகுதியற்றது; தானும் தகுதியற்றவன்!

இரண்டு தந்தைகளுமாய்ச் சேர்ந்து சிவகாமியின் உயிருக்கு இறுதி தேடி விட்டார்கள். தன்னுடைய வாழ்வுக்கும் உலை வைத்து விட்டார்கள். ஆனபோதிலும், அவர்கள் மீது மாமல்லர் அதிகமாகக் கோபங்கொள்ள முடியவில்லை.

மகளைப் பிரிந்த துயரத்தினால் ஆயனர் ஏறக்குறையச் சித்தப் பிரமை கொண்ட நிலையில் இருக்கிறார். கால் முறிந்து எழுந்து நிற்கவும் முடியாமல் கிடந்த இடத்திலேயே கிடக்கிறார். அவர் மேல் எப்படிக் கோபம் கொள்வது? அல்லது, போர்க்களத்திலே படுகாயம் அடைந்து யமனுடன் போராடிக் கொண்டிருக்கும் மகேந்திர பல்லவரிடந்தான் எவ்விதம் கோபம் கொள்ள முடியும்?

சிவகாமி இல்லாத உலகத்திலே தாம் உயிர் வாழ்வது என்னும் எண்ணத்தை மாமல்லரால் சகிக்கவே முடியவில்லை. எனினும், சில காலம் எப்படியும் பல்லைக் கடித்துக் கொண்டு ஜீவித்திருக்கத்தான் வேண்டும்; நராதமர்களும், நம்பிக்கைத் துரோகிகளும், மனித உருக்கொண்ட ராட்ச தர்களுமான வாதாபி சளுக்கர்களைப் பழி வாங்குவதற்காகத்தான்!

இதுவரையில் இந்த உலகமானது கண் டும் கேட்டுமிராத முறையிலே பழி வாங்க வேண்டும்! சளுக்கர் தொண்டை நாட்டில் செய்திருக்கும் அக்கிரமங்களுக்கு ஒன்றுக் குப் பத்து மடங்காக அவர்களுக்குச் செய்ய வேண்டும். சளுக்க நாட்டில் இரத்த ஆறுகள் ஓட வேண்டும். அப்படிப் பெருகி ஓடும் செங்குருதி நதிகளில், பற்றி எரியும் பட்டணங்களின் மீது கிளம்பும் அக்கினி ஜுவாலைகள் பிரதிபலிக்க வேண்டும்! அந்த அரக்கர்களின் நாட்டிலே அப்போது எழும் புலம்பல் ஒலியானது தலைமுறை தலைமுறையாகக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்!

இவ்விதம் பழி வாங்குவதைப் பற்றி எண்ணிய போதெல்லாம் மாமல்லருக்குச் சிறிது உற்சாகம் உண்டாயிற்று. அடுத்த கணத்தில், ''சிவகாமி இவ்வுலகில் இப் போதில்லை; அவளை இனிமேல் பார்க் கவே முடியாது'' என்ற எண்ணம் தோன்றி யது. உற்சாகம் பறந்து போய்ச் சோர்வு குடிகொண்டது. உடம்பின் நரம்புகள் தளர்ந்து சகல நாடிகளும் ஒடுங்கிக் குதிரை யின் கடிவாளங்கள் கையிலிருந்து நழுவும் படியான நிலைமையை அடைந்தார்.

அந்த மனச் சோர்வைப் போக்கிக் கொள்வதற்காக மாமல்லர் பழைய ஞாப கங்களில் தம்முடைய மனத்தைச் செலுத்த முயன்றார்.

சென்ற மூன்று நாலு வருஷங்களில் சிவகாமிக்கும் தமக்கும் ஏற்பட்டிருந்த தொடர்பை நினைத்த போது மாமல்லரின் இருதய அடிவாரத்திலிருந்து பந்து போன்ற ஒரு பொருள் கிளம்பி மேலே சென்று தொண்டையை அடைத்துக் கொண்டது போலிருந்தது. கண்களின் வழியாகக் கண்ணீர் வருவதற்குரிய மார்க்கங்களையும் அது அடைத்துக் கொண்டு திக்குமுக்காடச் செய்தது.

ஆஹா! உலகத்தில் அன்பு என்றும், காதல் என்றும், பிரேமை என்றும் சொல் கிறார்களே! சிவகாமிக்கும் தமக்கும் ஏற்பட்டிருந்த மனத் தொடர்பைக் குறிப் பிடுவதற்கு இவையெல்லாம் எவ்வளவு தகுதியற்ற வார்த்தைகள்?

தளபதி பரஞ்சோதியும் அந்தத் திரு வெண்காட்டு மங்கையும் கொண்டுள்ள தொடர்பைக்கூட அன்பு, காதல், பிரேமை என்றுதான் உலகம் சொல்கிறது. ஆனால் பரஞ்சோதியின் அனுபவத்துக்கும் தம்மு டைய அனுபவத்துக்கும் எத்தனை வித்தி யாசம்?

பரஞ்சோதி சேர்ந்தாற்போல் பல தினங்கள் உமையாளைப் பற்றி நினைப் பது கூட இல்லை என்பதை மாமல்லர் அறிந்திருந்தார். ஆனால் அவருடைய உள்ளத்திலேயிருந்து ஒரு கணநேரமாவது சிவகாமி அப்பாற்பட்டதுண்டா? கேணி யில் உள்ள தண்ணீரை இறைத்துவிட்டால், அடியில் உள்ள நீர் ஊற்றிலிருந்து குபு குபு வென்று தண்ணீர், மேலே வருமல்லவா? அதே மாதிரியாக மாமல்லரின் இருதய மாகிய ஊற்றிலிருந்து சிவகாமியின் உரு வம் இடைவிடாமல் மேலே வந்து கொண் டிருந்தது. ஆயிரமாயிரம் சிவகாமிகள் நெஞ்சின் ஆழத்திலிருந்து கிளம்பி மேலே மேலே வந்து மறைந்து போய்க் கொண் டேயிருப்பார்கள்.

முகத்தில் புன்னகை பூத்த சிவகாமி, கலீரென்று சிரிக்கும் சிவகாமி, புருவம் நெரித்த சிவகாமி சோகம் கொண்ட சிவ காமி பயத்துடன் வெருண்டு பார்க்கும் சிவகாமி, கண்களைப் பாதி மூடி ஆனந்த பரவசத்திலிருக்கும் சிவகாமி, வம்புச் சண்டைக்கு இழுக்கும் விளையாட்டுக் கோபங் கொண்ட சிவகாமி - இப்படியாக எத்தனை எத்தனையோ சிவகாமிகள் மாமல்லரின் உள்ளத்தில் உதயமாகிக் கொண்டேயிருப்பார்கள்.

தாய் தந்தையரோடு பேசிக் கொண்டி ருக்கும் போதும், இராஜரீக விவரங்களை மிக்க கவனமாகக் கேட்டுக் கொண்டிருக் கும் போதும், புரவியின் மீது அதிவேக மாகப் போய்க் கொண்டிருக்கும் போதும் இராஜ சபையில் வீற்றிருந்து ஆடல் பாடல் விநோதங்களைக் கண்டு கேட்டுக் களித்துக் கொண்டிருக்கும் போதும், போர்க்களத்தில் வாள்களும் வேல்களும் நாலா புறமும் ஒளி வீசி ஒலி செய்ய எதிரி சைனியங்களுடன் வீரப்போர் புரிந்து அவர்களை விரட்டி யடிக்கும் போதும் எப்படியோ மாமல்ல ரின் உள்ளத்தின் அடிவாரத்தில் சிவகாமி யின் நினைவு மட்டும் இருந்து கொண்டுதா னிருக்கும்.

பகல் வேளையில் பல்வேறு காரியங் களில் ஈடுபட்டிருக்கும் சமயங்களிலேதான் இப்படியென்றால், இரவு நேரங்களில்

சொல்ல வேண்டியதில்லை. காஞ்சி நகரில் அரண்மனையில் தங்கும் நாட்களில் இரவு போஜனம் முடிந்து தாம் தன்னந்தனியாகப் படுக்கைக்குப் போகும் நேரத்தை எப்போதும் மாமல்லர் ஆவலுடன் எதிர் நோக்குவது வழக்கம். ஏனெனில் சிவகாமியைப் பற்றிய நினைவுகளிலேயே அவருடைய உள்ளத்தைப் பூரணமாக ஈடுபடுத்தலாமல்லவா? கருவண்டையொத்த அவளுடைய கண்களையும், அந்தக் கண்களின் கருவிழிகளைச் சுழற்றி அவள் பொய்க் கோபத்துடன் தன்னைப் பார்க்கும் தோற்றத்தையும் நினைத்து நினைத்துப் போதை கொள்ளலாமல்லவா?

இப்படி நெடுநேரம் சிவகாமியைப்



பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்த பிறகு கடைசியில் கண்களை மூடித் தூங்கினால், தூக்கத்திலும் அவளைப் பற்றிய கனவு தான். எத்தனை விதவிதமான கனவுகள்? அந்தக் கனவுகளில் எத்தனை ஆனந்தங்கள்? எத்தனை துக்கங்கள்? எத்தனை அபாயங்கள்? எத்தனை ஏமாற்றங்கள்?

கனவுகளிலே என்னவெல்லாமோ ஆபத்துக்கள் சிவகாமிக்கு ஏற்பட்டதும், அவற்றிலிருந்து அவளைத் தப்புவிக்கத் தாம் முயன்றதும், சில சமயம் அவளைத் தப்புவிப்பதற்கு முன்னாலே கனவு கலைந்து எழுந்து, மீதி இரவெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததும், மறு நாள் விரைந்து சென்று சிவகாமிக்கு அபாயம் ஒன்றுமில்லை என்று தெரிந்துகொண்டு ஆறுதல் அடைந்ததும், மாமல்லருக்கு இப்போது நினைவுக்கு வந்தன. அந்தப் பயங்கரமான கனவுகள் இப்போது மெய்யாகி விட்டன! உண்மையாகவே ஆபத்து வந்த சமயத்தில் தான் அருகிலிருந்து அவளைக் காப்பாற்ற முடியாமற் போய்விட்டது.

அந்தப் பேதையின் உள்ளத்தில் இப்படி ஒரு பெரிய ஆபத்துத் தனக்கு வரப் போகிறது என்பது எப்படியோ தோன்றியிருக்க வேண்டும். இதன் காரணமாகத்தான் அவள் தன்னிடம் அடிக்கடி ''என்னை மறக்க மாட்டீர்கள் அல்லவா?'' என்றும், ''என்னைக் கைவிடமாட்டீர்கள் அல்லவா?'' என்றும் கேட்டுக் கொண்டிருந்தாள். அப்போதெல்லாம், ''இதென்ன அர்த்தமில்லாத கேள்வி?'' என்று மாமல்லர் அலட்சியமாகத் திருப்பிக் கேட்பது வழக்கம். உண்மையில் அது எவ்வளவு அர்த்த புஷ்டியுள்ள கேள்வி!

சிவகாமி! என் கண்ணே! உன்னை மறக்க மாட்டேன்! இந்த ஜன்மத்தில் உன்னை மறக்க மாட்டேன்! எந்த ஜன்மத்திலும் மறக்கமாட்டேன். உன்னை என்னிடமிருந்து பிரித்த பாதகர்மேல் முதலில் பழி வாங்குவேன்! அதற்குப் பிறகு உன்னைத்



தேடிக் கொண்டு வருவேன். யமன் உலகத்துக்கு உன்னைத் தொடர்ந்து வந்து தர்மராஜாவிடம், ''எங்கே என் சிவகாமி?'' என்று கேட்பேன். சொர்க்க லோகத்திற்குச் சென்று தேவேந்திரனிடம், ''என் சிவகாமி எங்கே? ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை ஆகிய நாலு பேர் உங்கள் உலகில் இருக்கிறார்கள். எனக்கோ சிவகாமி ஒருத்திதான் இருக்கிறாள்! அவளைக் கொடுத்து விடுங்கள்!'' என்று கேட்பேன்.

சிவகாமி! சொர்க்க லோகத்தில் நீ இல்லாவிட்டால் அதோடு உன்னை விட்டு விட மாட்டேன்! பிரம்மலோகம், வைகுண்டம், கைலாசம் ஆகிய உலகங்களில் எங்கே நீ இருந்தாலும் உன்னை என்னிடமிருந்து பிரிக்க முடியாது! வருகிறேன், சிவகாமி வருகிறேன்! கூடிய விரைவில் நீ இருக்குமிடம் வருகிறேன்!

## முப்பத்துநான்காம் அத்தியாயம்

# இந்தப் பெண் யார்?

காஞ்சிமா நகரம் இதற்கு முன் எந்த நாளிலும் கண்டிராத அமைதியுடன் விளங்கிற்று. பெரிய பயங்கரமான புயல் அடித்து ஓய்ந்த பிறகு ஏற்படும் அமைதியை அது ஒத்திருந்தது. நகர வாசிகளின் மன நிலைமையும் அதற்கேற்றபடிதான் இருந்தது.

வாதாபிப் படைகள் தொண்டை நாட்டில் சொல்லொணாத அட்டூழியங்களைச் செய்துவிட்டுப் பின்வாங்கிச் சென்றது பற்றியும், மணிமங்கலத்திலும் சூரமாரத்திலும் நடந்த போர்களைப் பற்றியும், காஞ்சி நகர் வாசிகளுக்கு அரைகுறையான விவரங்கள் கிடைத்திருந்தன. மகேந்திர பல்லவச் சக்கரவர்த்தி மணிமங்கலம் போர்க்களத்தில் அடைந்த காயங்களினால் யமன் உலகை எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பதும், அவரைப் பிழைப்பிக்க அரண்மனை வைத்தியர்கள் பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருப்பதும் காஞ்சி மக்களுக்குத் தெரிந்திருந்தபடியால், எந்த நிமிஷத்திலும் அவர்கள் ''சக்கரவர்த்தி காலமானார்'' என்ற துக்கச் செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மணிமங்கலம் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த வீரர் சிலரின் மூலம் ஆயனருடைய கால் முறிந்த செய்தியையும், சிவகாமி, சளுக்கர்களால் சிறைப் பிடித்துக் கொண்டு போகப்பட்ட விவரத்தையும் காஞ்சி மக்கள் கேள்விப்பட்டிருந்தார்கள். இந்தச் சம்பவம் அவர்களுக்கு எல்லாவற்றிலும் அதிக வேதனையை அளித்திருந்ததுடன் மகேந்திர பல்லவரிடம் அவர்களுக்கிருந்த மரியாதையைப் பெரிதும் குறைத்திருந்தது.

இத்தகைய காரணங்களினால் காஞ்சி மாநகரம் களையற்றுக் கலகலப்பற்று, சோபிதமில்லாமல் அசாதாரணமான அமைதி குடிகொண்ட நகரமாய் விளங்கிற்று.

நகரத்திலேயே இப்படி இருந்தது என்றால் அரண்மனைக்குள்ளே கேட்க வேண்டியதில்லை. புவனமகாதேவி மகேந்திர பல்லவரை மணந்து காஞ்சி அரண்மனைக்குள்ளே கால் வைத்த நாளிலிருந்து, அந்த அரண்மனை ஒரு காலத்திலும் இம்மாதிரி கலகலப்பற்றும் பிரகாசமில்லாமலும் பேய் குடிகொண்ட பழைய மாளிகையைப் போலத் தோற்றமளித்தது கிடையாது.

காஞ்சி நகரம் முற்றுகையிடப்பட்டிருந்த காலத்திலே கூட அந்த அரண்மனையில் அந்தந்த நேரத்தில் கீத வாத்தியங்களின் ஒலியும், பேரிகை முரசங்களின் கோஷமும் சங்கங்களின் முழக்கமும் ஆலாசிய மணிகளின் சத்தமும் கேட்டுக் கொண்டுதானிருந்தன.

இவற்றுடன் அரண்மனைத் தாதிப் பெண்கள் கால்களில் அணிந்திருந்த பாதசரங்களின் கிண்கிணி ஓசை இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருக்கும். வேதமந்திரங்களின் கோஷமும், செந்தமிழ்ப் பாடல்களின் கீதநாதமும் சில சமயங்களில் கேட்கும்.

அரண்மனை முன் வாசல் முற்றத்தில் வந்து போகும் குதிரைகளின் காலடிச் சத்தம் சதா கேட்டுக் கொண்டிருக்கும்.

இப்படியிருந்த அரண்மனையில் இப்போது ஆழ்ந்த மௌனம், - பீதியை உண்டாக்கும் பயங்கர மௌனம், - குடி கொண்டிருந்தது.

மணிமங்கலம் போர்க்களத்திலிருந்து மகேந்திர பல்லவரை எடுத்து வந்த பிறகு இராஜ வைத்தியர்கள் அல்லும் பகலும் அவர் பக்கத்தில் இருந்து சிகிச்சை செய்து வந்தார்கள்.

மகேந்திர பல்லவர் பலநாள் நினைவற்ற நிலையிலேயே இருந்தார். சூரமாரம் போர்க்களத்திலிருந்து மாமல்லர் திரும்பி வந்த பிறகு கூடச் சக்கரவர்த்திக்குச் சுய நினைவு இல்லாமலிருந்தது.

அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாகக் கண் விழித்துப் பார்க்கவும் தம் எதிரிலுள்ளவர்களைத் தெரிந்து கொள்ளவும் ஆரம்பித்தார்.

இனிமேல் சக்கரவர்த்தி பிழைத்துக் கொள்வார் என்றும், ஆனால், இன்னும் சில காலம் அவரைக் கவலையுடன் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் வைத்தியர்கள் சொன்னார்கள். மாமல்லரைப் பார்க்கும் போதெல்லாம் மகேந்திரருக்கு உணர்ச்சி அதிகமாகிப் பேசுவதற்கு முயன்றபடியால் மாமல்லர் தந்தையிடம் அதிகமாகப் போகாமலிருப்பதே நல்லதென்று அபிப்பிராயப் பட்டார்கள்.

இதனால் மாமல்லரின் மனவேதனையும் அமைதிக் குலைவும் அதிகமாயின. அவர் மனம் விட்டுப் பேசுவதற்கு அரண்மனையில் யாரும் இல்லை. தளபதி பரஞ்சோதியோ சேனைகளை அழைத்துக் கொண்டு கோட்டைக்கு வெளியே சென்று, வாதாபிப் படையால் ஹிம்சிக்கப்பட்ட கிராம வாசிகளுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டிருந்தார்.

புவனமகாதேவி எப்போதும் கண்ணீரும் கம்பலையுமாயிருந்தார். புலிகேசியை நகருக்குள் அழைப்பதால் கேடுதான் விளையும் என்று தாம் முன்னாலேயே எச்சரித்ததை இப்போது சொல்லிச் சொல்லி வருந்தினார். அதோடு மாமல்லருக்குப் பாண்டிய ராஜ குமாரியை அப்போதே மணம் முடிக்காதது எவ்வளவு தவறு என்பதையும் அடிக்கடி குறிப்பிட்டார். இந்த பேச்சு மாமல்லரின் காதில் நாராசமாக விழுந்தது.

**நா**ளாக ஆக, மாமல்லருக்குச் சிவகாமியைப் பற்றி யாருடனாவது மனத்தைத் திறந்து பேசாவிட்டால் இருதயம் வெடித்து விடும் போலிருந்தது. அப்படிப் பேசக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? ஆயனர் ஒருவர்தான். அவர்தான் சிவகாமியைப் பற்றித் தாம் பேசுவதை ஒத்த உள்ளத்துடன் கேட்கக் கூடியவர். மேலும் அவருடைய உடல் நிலையைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? பார்க்கப் போனால், தமக்கு மகேந்திர பல்லவர் எப்படியோ, அப்படியே ஆயனரும் தந்தை தானே? அவரைக் கவனியாமலிருப்பது எவ்வளவு பிசகு?

இவ்விதம் எண்ணி ஒருநாள் மாமல்லர் ஆயனரை அவருடைய அரண்ய வீட்டில் பார்ப்பதற்காகத் தன்னந்தனியே குதிரை மீதேறிப் பிரயாணமானார்.

காட்டு வழியாகப் போய்க் கொண்டிருக்கையில், அவருக்குத் தாமரைக்குளம் ஞாபகம் வந்தது. தானும் சிவகாமியும் எத்தனையோ ஆனந்தமான நாட்களைக் கழித்த இடம், - ஒருவர்க்கொருவர் எத்தனையோ அன்பு மொழிகளைக் கூறிப் பரவசமடைந்த இடம் - அப்பேர்ப்பட்ட குளக்கரையைப் பார்க்க வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று.

எனவே, பாதையை விட்டுச் சிறிது விலகித் தாமரைக் குளக்கரையை நோக்கிக் குதிரையை மெதுவாகச் செலுத்தினார்.

சற்றுத் தூரம் போனதும் அந்தக் காட்டு வழியில் எதிரே பெண் ஒருத்தி வருவது தெரிந்தது. மாமல்லர் வருவது கண்டு திடுக்கிட்ட தோற்றத்துடன் அவள் ஒதுங்கி நின்றாள். மாமல்லர் தமது பரம்பரையான குலப் பண்பாட்டுக்கு உகந்தபடி அவளுடைய முகத்தை மறுமுறை ஏறிட்டுப் பாராமல் தம் வழியே சென்றார். ஆனால், சிறிது தூரம் சென்றதும் அந்த ஸ்திரீயின் முகம் ஏற்கெனவே பார்த்த முகம்போல் ஞாபகத்துக்கு வந்தது. ''அவள் யார்? அவளை எங்கே பார்த்திருக்கிறோம்?'' என்று எண்ணமிட்டுக் கொண்டே மாமல்லர் தாமரைக் குளத்தை அடைந்தார்.

(தொடரும்)

---

❒ தென் ஆப்பிரிக்காவில் ஜான் மெரிமான், கேப் பிரிவின் முதல்வராக இருந்தார். தேர்தலில் நின்ற போது இப்படி ஒரு கவர்ச்சியான விளம்பரத்தை வெளியிட்டார் : 'என்னைத் தேர்ந்தெடுத்தால் ஆட்டு ரோமத்திற்கு வரி இல்லாதபடி செய்வேன்!'

மக்கள், 'இவர் வரியைக் குறைக்கிறார்; இவருக்கே நம் வாக்கு' என்று ஏராளமான வாக்களித்து அவரை வெற்றி அடையச் செய்தனர். இதில் ஒரு ரகசியம் என்னவெனில் ஆட்டு ரோமத்திற்கு வரி விதிக்கும் எண்ணமே அதற்கு முன்போ, பின்போ யாருக்குமே இருந்தது இல்லை!

- 'ஆப்பிரிக்கன் அகேஷின்ஸ்' என்ற புத்தகத்திலிருந்து
தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்



ESTD 1985

# PARK TOWN BENEFIT FUND LIMITED

(Central Government Approved 'NIDHI' Company)

Regd. Office : 223, South Mint Street, Madras - 600 003.

Phone : 582676



## FIXED DEPOSIT SCHEME

| Period | 90 Days | 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 4 Years | 5 Years |
|---|---|---|---|---|---|---|---|
| Rate of interest per annum | 13% | 15% | 16% | 17% | 17.5% | 18% | 20% |

1/2% Extra Interest will be paid on 3 years & 4 years Deposits only, if opted for quarterly Interest.

*DEPOSIT DOUBLES IN 45 MONTHS.*

## KUBER DEPOSIT SCHEME

Rs. 7,500/- Invested for 15 years becomes Rs. 1,20,000/-

Save Rs. 100/- p.m. under our PORKUVIYAL Scheme and draw Rs. 3,00,000/- after 25 years.

Rs. 100/- per month in R.D. Scheme becomes Rs. 4,720/- in three years.

## PENSIONER'S PARADISE SCHEME

Interest at 19% will be paid on deposits of Rs. 13,000/- and above and for one year Deposits also. (includes Widows & Physically Handicapped)

**LOANS AGAINST GOLD JEWELLERY UPTO Rs. 300/- PER GRAM.**

*Honorary Advisor :*

**P. BALASUBRAMANAIAM,**
Senior Trustee,
Sri Kandaswamy Temple.

*Chairman :*

**R. VIVEKANANTAN.**

*Board of Directors :*

P. EKAMBARAM,
B. VISALAKSHI,
P.K. CHANDRASEKARAN,
P.K. SIVAKUMAR,
G. EKAMBARAM CHETTIAR,
K.T. SHANMUGAM,
C.T. SHANMUGAM, Ex. J.P.,
P.T. SHANMUGAM, B.E.,
V.A. GNANAPRAGASAM,
GOMATHI SUNDARAM, B.Sc.,
P.E. RAMACHANDRAN.

***Transactions with share holders only.***

# சமுதாயப் பணியில் ஒரு சிம்ம கர்ஜனை!

முகமது ஆரிஃப்



உடலில் ஊனம் : அறிவில் அல்ல!

"உன் பெயர் என்னம்மா?"

"லதா."

"என்ன வயது?"

"பத்தொன்பது."

லதாவைப் பார்த்தால் பன்னிரண்டு வயதுகூடச் சொல்ல முடியாது!

லதாவுக்கு ஐந்து வயதில் மூளைக் காய்ச்சல் வந்து காலையும், கையையும் பாதித்திருக்கிறது. எட்டாவது வகுப்பு வரை படித்துக் கொண்டிருந்தவர், மறுபடி மேற்கொண்டு படிக்க இப்போது முயன்று வருகிறார். ஃபிஸியோதெரபியும், கைகால்களை அசைக்கப் பயிற்சியும் செய்து கொண்டிருந்த லதாவை, ஈரோடு அரிமா சங்கம் நடத்தி வரும் மறுவாழ்வு நிலையத்தில் சந்தித்தோம். "இப்போது எத்தனையோ பரவா

# அருள்வாக்கு



**ப**த்து ரூபாயை ஒருவன் திருடுவதால், திருட்டுக் கொடுத்தவருக்குச் சிறிது கஷ்டம் உண்டாகிறது. திருடியவனுக்கோ அதைவிடப் பெரிய கஷ்டமாகப் பல நாட்கள் சிறைவாசம் விதிக்கப்படுகிறது. இப்படிச் செய்தால்தான் அவன் மீண்டும் அந்தத் தப்புப் பண்ண மாட்டான், மற்றவர்களும் அந்தத் தப்பைப் பண்ணப் பயப்படுவார்கள் என்கிற அடிப் படையில் தண்ட நீதி அமைந்திருக்கிறது. மனித இயல்புப்படி (Psychology) பார்க்கும் போது இதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டி யிருக்கிறது.

ஆனால், இதனிலும் சிலாக்கியமான ஓர் உபாயத்தையும் அரசாங்கம் அதே சமயத்தில் விருத்தி செய்ய வேண்டும். குற்றம் இழைத்த பின் ஒருவரைத் தண்டிப்பதும், ஒருவர் சுபாவ மான தர்ம உணர்ச்சி இல்லாமல் தண்டனைக் காகப் பயந்தே குற்றம் செய்யாமல் இருக்கச் செய்வதும் இரண்டாம் பட்சம்தான். குற்றம் செய்கிற எண்ணமே தோன்றாமல் இருக்கச் செய்வதுதான் சிலாக்கியமானது.

தர்ம சாஸ்திரப்படி நடக்கும் ஸத்துக்கள் உருவாவதற்கு உரிய சூழ்நிலையை அரசாங் கம் காப்பாற்றிக் கொடுத்தால், ஜனங்களுக்குக் குற்றம் செய்கிற உணர்வே கொஞ்சம் கொஞ்ச மாகக் குறைந்து விடும். தர்மம் அறிந்தவர்கள் தர்மத்தை அநுஷ்டிப்பவர்கள் விருத்தியாவ தற்கு வசதி இருந்தால், அவர்கள் மற்றவர் களிடமும் தங்கள் வாழ்க்கை உதாரணத்தா லேயே சாந்தத்தையும் ஒழுக்கத்தையும் பரப்பு வார்கள். சண்டை, பூசல், குற்றம் எல்லாம் குறையும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்க ராச்சாரிய சுவாமிகள்.**

யில்லை'' என்றார் லதா.

''எப்படியும் மறுபடி நான் வேலைக் குப் போகணும்!'' என்று உறுதியோடு சொல்லுகிறார் பஸ் கண்டக்டராய் இருந்த முருகேசன். கைகளுக்குப் பலம் தரும் சக்க ரத்தை இடைவிடாது சுழற்றிக் கொண்டி ருந்தார் முருகேசன்.

''எப்படி உங்களுக்குக் கை கால் பல மிழந்தது?''

''மூளைக் காய்ச்சல் வந்தது.''

''எப்போது?''

''88 - டிசம்பர் 13.''

வார்த்தைகளின் வடிவம் சற்றே சிதைந் திருந்தாலும், நினைவு துளியும் சிதையா மல் பேசுகிறார் முருகேசன்.

**ஈ**ரோட்டை ஒட்டியுள்ள செங்கோடம் பாளையத்தில் இயங்கி வரும் அரிமா சங்க மறுவாழ்வு இல்லத்தில், மதுரை, திருச்சி மாவட்டங்களிலிருந்தும் கூட வந்து, தங்கிப் படிக்கும் குழந்தைகளைப் பார்த் தாலே, கண்கள் கலங்குகின்றன. எல்லாமே போலியோ நோய் தாக்கிய குழந்தைகள். ஆனால் ஒன்றிடமாவது உற்சாகக் குறைவு இருக்க வேண்டுமே!

முத்துக்குமார், மனவளர்ச்சி குன்றிய பையன். கால்களும், கைகளும் பாரிச வாயு தாக்கிச் செயலிழக்கச் செய்திருக்கிறது. இப்போது நடக்கிறான். பத்து வருடப் பயிற்சி, பலன் அளித்திருக்கிறது. பயிற்சி மட்டுமா இங்கே கிடைக்கிறது? பரிவும் தான்.

நெற்றியில் சிறிய விபூதிக் கீற்றோடு, இடது கால் விரல்களில் பென்சிலைச் செருகிக் கொண்டு லாகவமாய்ப் படம் வரையும் சிறுவனைக் கேட்டோம் :

''உன் பெயர் என்னப்பா?''

''முகம்மது ஆரிஃப்.''

''பெரியவனானப்புறம் என்ன செய்ய ஆசை?''

''ஆர்ட்டிஸ்ட்டாகணும்!''

நம்பிக்கை, உற்சாகம், கலகலப்பு - இந்தக் குழந்தைகளின் கண்களில், செயல் களில், பேச்சில் ஒன்றிக் கலந்திருக்கிறது.

அச்சகம், ரெடிமேட் ஆடைத் தயா ரிப்பு, புத்தக பைண்டிங் மையம் என்று ஆக்க பூர்வமாக வேலை வாய்ப்புத் தரும் பணிகளில் எல்லாமே சுறுசுறுப்பைக் காண முடிந்தது. இவை மூலம் கிடைக்கும் வரு வாய் நலிவுவுற்றவர் நல்வாழ்வுக்கு உதவு கிறது.

சமீபத்தில் துவங்கப்பட்ட ஆலோ சனை மையம், மண வாழ்வில் குறுக்கிடும் சலசலப்புக்களையும் சஞ்சலங்களையும் இருதரப்பினரும் சந்தித்துத் தீர்த்துக் கொள்ள உதவி வருகிறது.

இந்த அரிமா சங்கத்தின் அடுத்த லட்சி யம் பார்வையற்றவர்களுக்கான சிகிச்சை, மற்றும் மறுவாழ்வுத் திட்டம். இதற்காக சர்வதேச அரிமா சங்கத்துடன் தொடர்பு கொண்டு நிதிவசதி பெறவும் முயற்சி எடுத்து வருகிறது. சமுதாயப் பணியில் சிம்ம கர்ஜனை! தொடரட்டும்.

**- எஸ். வி. என்.**

# எண்ணங்களின் பலன்களை அனுபவித்தேயாக வேண்டும்



"சகல பிராணிகளின் எண்ணங்களும் வார்த்தைகளும் செய்கைகளும் அவை நடந்த அந்த க்ஷணமே மகாகாசத்தில் அவைகளுக்குத் தகுந்த ரூபங்களுடன் விசித்திர வர்ணங்களுள்ள படங்களாக பதிந்துவிடும். எக்காலத்திலும் அழியாது. அவரவர்களுடைய எண்ணங்கள் செய்கைகளுக்கு தக்கபடி சுக துக்கங்களை அனுபவிக்க வேண்டும்.

—"ராமாயண தத்வார்த்த தீபிகை

***தூய்மையான எண்ணத்துடன், பக்தியுடன் எங்கள் சுவையான கார தின்பண்டங்கள் தயாரிக்கப்படுகின்றன.***



**கல்யாண வைபவங்களுக்கு**

சீர் முறுக்கு, சீர் முள்ளுத்தேன்குழல், அதிரசம், அப்பம் திரட்டுப்பால், பருப்புத் தேங்காய், வகைகள் ஆர்டரின் பேரில் செய்துத் தரப்படும்

மேலும் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

**24, 2வது மெயின் ரோடு,**
**காந்தி நகர், அடையாறு,**
**சென்னை- 20**
**போன் : 412557**



இவளைப் பற்றி என்ன நினைப்பது என்று மீராவுக்கு சுத்தமாகப் புரியவில்லை. மைதிலியைப் பற்றி வம்பு பேச வேலை மெனக்கெட்டுக் காரை அனுப்பித் தன்னை வரவழைத்திருக்கிறாள் என்கிற எண்ணம் ரொம்பக் குழந்தைத்தனமாகத் தோன்றிற்று.

''எப்படிப்பட்டவங்கன்னா என்ன அர்த்தத்திலே நீங்க கேக்கிறீங்கன்னு புரியல்லே,'' என்றாள் தன் திகைப்பை மறைத்துக் கொண்டு. ''எங்க ஸ்கூல்லே இருக்கிற நல்ல டீச்சர்கள்லே அவங்க ஒருத்தர். அதைத்தவிர ரொம்ப நல்லவங்க.''

''நல்லவங்கன்னா..... எப்படிச் சொல்றே?'' என்றாள் மிஸஸ் செல்லப்பன்.

எதற்காக இவள் இப்படிப்பட்ட கேள்விகளைத் தன்னிடம் கேட்கிறாள் என்கிற எரிச்சலுடன், ''அப்படித்தான் எனக்குப் படுது'' என்றாள். ''இங்கே வந்த புதுசிலே நான் ரொம்பத் திண்டாடிப் போன போது அவங்கதான் எங்கிட்ட சிநேகிதம் காட்டி சமாளிக்க உதவினாங்க. ஸ்டுடென்ட்ஸ்கிட்ட உண்மையான அக்கறை உண்டு அவங்களுக்கு.''

மிஸஸ் செல்லப்பன் லேசாகச் சிரித்தாள். ''உங்கிட்ட பிரியம் காட்டினதுக்கு வேற காரணம் இருக்கும். வெளிநாட்டிலே இருந்து வந்தவங்கிட்ட சில பேருக்குத் தனிப்பட்டப் பிரியம் ஏற்படும்.''

''அப்படிப்பட்டவங்க இல்லே அவங்க நிச்சியமா,'' என்றாள் மீரா ரோசத்துடன். ''எனக்குத் தெரிஞ்சவரை அவங்க நல்லவங்க. பாசாங்குத்தனமில்லே, தைரியசாலி.''

மிஸஸ் செல்லப்பன் பதில் ஏதும் சொல்லாமல் தன் கையிலிருந்த கூல் ட்ரிங்க் கிளாஸை ஆழ்ந்து பார்த்தாள்.

''எதுக்குக் கேக்கறீங்க ஆன்ட்டி?''

''எனக்குத் தெரியணும்'' என்றாள் மிஸஸ் செல்லப்பன், அதுதான் அதற்கு விடை என்பது போல. ''அவ ஒரு நார்மல் மனுஷி இல்லேன்னு எனக்குத் தோணுது. சொந்த வாழ்க்கையிலே ஏதோ ஏமாற்றமாமே?''

தன்னுடைய அந்தரங்கத்தில் இவள் தலையிடுவது போல் மீராவுக்குக் கூச்சமேற்பட்டது. தனது சொந்த ஏமாற்றங்களைப் பற்றின நினைவுகூட மைதிலிக்குக் கிடையாது என்றால் இவள் நம்பப்போவதில்லை. நினைவு இல்லாதது மட்டுமில்லை, அவற்றை ஏமாற்றங்களாகக் கருதக்கூட இல்லை என்பது இவளுக்கு எப்படி விளங்கும்?

''அவங்க சொந்த வாழ்க்கையைப் பத்தி எனக்குத் தெரியாது. தெரிஞ்சுக்கணும்னு எனக்கு ஆர்வமும் இல்லே'' என்றாள் மெல்லிய குரலில். ''அவங்க நார்மல் இல்லேன்னு எப்படிச் சொல்றீங்க?''

''சில பெண்களைக்கண்டா அவங்களுக்குக் காரணமில்லாம கோபம் வருதுன்னு கேள்விப்படறேன். மீனாட்சியைக் கண்டா அவங்களுக்கு என்னவோ பிடிக்கிறதேயில்லே. எப்பப்பார்த்தாலும் புகார்தான். அதுவும் ஒரு சின்னப் பொண்ணு என்கிற எண்ணமில்லாதவங்க போல், ஒரு வெறுப்போட புகார் செய்யறதை என்னாலே புரிஞ்சுக்க முடியல்லே. அவ கொஞ்சம் விளையாட்டுப் பெண், படிப்

# காதலெனும் வானில்

பிலே அக்கறையில்லே. அதுக்கென்ன செய்ய முடியும்? நல்லாப் படிக்கிறதில்லே என்கிற கோபத்திலே அவ குணமே சரியில்லேன்னெல்லாம் சொல்றது நல்லாவா இருக்கு? என் குழந்தையைப் பத்தி எனக்குத் தெரியாதா?''

மீரா பேசாமல் அமர்ந்திருந்தாள். இவள் யாரை ஆழம் பார்க்கிறாள் என்று புரியவில்லை. மீனாட்சியைப் பத்தி என்ன சொன்னாங்க என்று கேட்பது அநாகரிகம் என்று தோன்றிற்று.

''ஹெட் மிஸ்ட்ரெஸ் என்னைக் கூப்பிட்டனுப்பிச்சு மகளைக் கொஞ்சம் கண்டிக்க வெய்யுங்கங்கறாங்க. இதுவா, 'ஓ'ன்னு அழுது. மைதிலி மேடமுக்கு என்னைக் கண்டா பிடிக்காது. அவங்கதான் கதை கட்டி விடறாங்கங்குது!''

மீராவுக்குச் சிரிப்பு வந்தது. ''கதை கட்டறதனாலே அவங்களுக்கு என்ன லாபம்?''

மிஸஸ் செல்லப்பனின் முகத்தில் கோபம் படர்ந்தது. மெல்லிய கோடிட்ட புருவங்கள் எரிச்சலுடன் சுருங்கின.

''அதிலே ஏதோ வக்கிர திருப்தி கிடைக்கிறது அவங்களுக்கு! அதுக்கு ஏதாவது மனோதத்வ காரணம் இருக்கும். மனசுக்குள்ள இருக்கிற ஏமாற்றத்தை யார் மேலேயாவது காட்டுவாங்க. அதுக்கு வகையா மீனாட்சி அகப்பட்டுக்கிட்டா.''

மைதிலியின் மேல் இவள் சுமத்தும் குற்றம் அபாண்டமானதாகப் பட்டது. மீனாட்சியைப் பற்றி உனக்கு என்ன தெரியும் என்று கேட்காததிலிருந்து மகளிடம் பூரண நம்பிக்கை இருக்கும் என்று தோன்றிற்று. அல்லது தெரிந்து கொள்ள விரும்பாத கோழைத்தனமாக இருக்கலாம்.

''ஸாரி ஆன்ட்டி'' என்றாள் மீரா நிதானமாக. ''மைதிலி மேமைப்பத்தி உங்களுக்குத் தெரியாததாலே இப்படியெல்லாம் நினைக்கிறீங்க. அவங்க கொஞ்சம் டிஸிப்ளின் எதிர்பார்க்கறவங்க. அது ஒண்ணும் தப்பில்லையே?''

மிஸஸ் செல்லப்பன் மறுபடி புருவங்களை நெரித்துப் பார்த்தாள். ''என்ன டிஸிப்ளின்? ஸ்கூலுக்குள்ள ஒண்ணும் வம்பு செய்யறதில்லேன்னு சொல்றாங்க. படிப்பிலே கவனம் குறைவுதான். இல்லேங்கல்லே. டியூஷன் வைக்கிறது அவளுக்குப் பிடிக்கல்லே. எனக்கும் அவங்க அப்பாவுக்கும் நேரமில்லே. ஏதோ பாஸ் பண்ணினா போதும்னு இருக்கோம். அதுக்குப் பிறகு என் கடையிலே வெச்சுக்குவேன். ஸ்கூலுக்கு வெளியிலே அவளுக்கு சிநேகிதம் இருக்கா பாருங்கங்கறாங்க. அவ போறதெல்லாம் உன்னைப் போல இருக்கிற சிநேகிதிங்க வீட்டுக்கு. சினிமா,



பார்ட்டின்னு சிநேகிதிங்களோட போறா. இதெயெல்லாம் கண்டிக்க முடியுமா என்ன? நீ அமெரிக்காவிலே வளர்ந்தவ. எல்லாத்துக்கும் உங்க அம்மா கண்டிச்சா உனக்குப் பிடிக்குமா?''

''பிடிக்காது'' என்று மீரா தலையசைத்தாள். ''ஆனா வீட்டிலே சில அடிப்படையான ரூல்ஸ் உண்டு. அதை எல்லாரும் கடைப்பிடிக்கணும்'' என்றாள் சிரித்தபடி. ''பொய் சொல்லக்கூடாது. எதையும் யார்கிட்டேந்தும் மறைக்கக்கூடாது. அவங்கவங்க வேலையை அவங்கவங்க செய்யணும். நேரத்தைக் கடைப் பிடிக்கணும். என்கிறா மாதிரி இது எல்லாருக்கும் பொதுவானது.''

மிஸஸ் செல்லப்பன் யோசனையுடன் அவளைப் பார்த்தாள். மீனாட்சியைப் பற்றி விவரமாகக் கேட்கத் தயங்குகிறாள் என்று மீரா நினைத்தாள். திடீரென்று மீராவுக்கு மிகவும் சோர்ந்து போயிற்று. இவளது குழப்பத்தைப் போக்கும் சக்தி தனக்கு இல்லை என்று தோன்றிற்று.

''ஆன்ட்டி எனக்கு நேரமாயிட்டது, நான் கிளம்பணும்'' என்று எழுந்தாள். ''மைதிலி மேமைப் பத்தி நீங்க தப்பா நினைக்கிறீங்க. வேணும்னு யாரும் சொல்ல மாட்டாங்க. ஆனா கொஞ்சம் சொன்ன விவரம் தப்பாவும் இருக்கலாம். நீங்க மீனாட்சியோட அதிக நேரம் செல



வழிக்கணும்.''

''எங்கேம்மா நேரம் கிடைக்குது?'' என்றாள் மிஸஸ் செல்லப்பன், லேசான பெருமிதத்துடன். ''அவங்க சொல்றதையெல்லாம் நான் நம்பல்லே. நம்ம பொண்ணுகிட்ட நமக்கு நம்பிக்கை இல்லேன்னா வேற யாருக்கு நம்பிக்கை இருக்கும்?''

தனது அலுப்பைக் காண்பிக்காமல், மீரா லேசாகப் புன்னகை செய்து கிளம்ப யத்தனித்தபோது வாசலில் பார்வையைப் பதித்திருந்த மிஸஸ் செல்லப்பனின் முகத்தில் சட்டென்று ஒரு பிரகாசம் தென்பட்டது. போர்டிகோவில் ஒரு பென்ஸ் வண்டி ஓசைப்படாமல் வந்து நின்றது. அதிலிருந்து சினிமாவில் அப்பா வேஷம் போடுபவர் போன்ற உருவத்துடன், வெள்ளை ஸஃபாரி ஸூட், வெள்ளை ஷூ, காதோரத்தில் மட்டும் நரை என்ற அலங்காரத்துடன் ஓர் ஆண் இறங்கி தூரத்திலேயே மிஸஸ் செல்லப்பனைப் பார்த்து மந்தகாஸத்துடன் முன்னேறி வந்தார்.

''நா வரேன் ஆன்ட்டி'' என்ற மீராவின் குரலைக் கேட்டு ஒரு புதிய மலர்ச்சியுடன் மீனாட்சியின் அம்மா திரும்பி, ''ரொம்ப தாங்க்ஸ்மா வந்ததுக்கு.'' டிரைவரைக் கூப்பிட்டு, ''இந்தப் பாப்பாவைக் காருக்கு அழைச்சிட்டுப்போ'' என்றதில் அவசரம் தொனித்தது. பிறகு மீராவை முழுசாக மறந்து போனாள். வந்தவர் மீனாட்சியின் அப்பா இல்லை என்று மீரா புரிந்து கொண்டாள். அப்பாவாக இருந்திருந்தால் மிஸஸ் செல்லப்பன் அறிமுகப் படுத்தியிருப்பாள். வேலைக்காரி டிரைவரைப் பார்த்து சூசகமாகச் சிரித்தாள். ''ஐயா எப்ப வர்றாங்க பம்பாயிலேந்து?'' என்றாள்.

அவன் உதட்டைப் பிதுக்கிச் சிரித்தான். காரில் அமர்ந்து *வீட்டை நோக்கிச் செல்லும்போது, ''நம்ம பொண்ணை நாம நம்பல்லேன்னா வேற யாரு நம்புவாங்க?'' என்று மீனாட்சியின் அம்மா சொன்னது மீராவுக்கு நினைவுக்கு வந்தது. மீனாட்சியின் அப்பாவும் மனைவியைப் பற்றி இதே மாதிரியான நம்பிக்கையுடன் இருப்பார் என்று தோன்றிற்று. மீரா தன்னை மறந்து, ''இட் இஸ் எ க்ரேஸி ஹவுஸ்'' என்றாள்.

''என்னம்மா சொன்னீங்க?'' என்று டிரைவர் திரும்பியபோது, ''ஒண்ணுமில்லே'' என்று சிரித்தாள்.

மிஸஸ் செல்லப்பன் எதற்காகத் தன்னை வரவழைத்தாள் என்று சரியாக விளங்கவில்லை. தான் ரொம்ப நவீனப் போக்குடையவள் என்று தெரிவிக்கவா? அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவள் மீனாட்சியின் சுதந்திரப்போக்குக்கு ஆதரவாகப் பேசுவாள் என்று நினைத்திருப்பாள். அல்லது உண்மையிலேயே மைதிலி ஜயராமனைப் பற்றி ஏதேனும் வம்பு அறிவதற்காக இருக்கலாம்.

என்ன காரணமாக இருந்தாலும் இந்த சந்திப்பு ஒரு பெரிய தோல்வி என்று மீரா நினைத்துக் கொண்டாள். மீனாட்சியின் அம்மாவைப் பற்றி மனத்தில் ஏற்கெனவே உருவாகியிருந்த அபிப்பிராயம் மாறவில்லை. ஆனால் இப்பொழுது ஒரு விஷயம் தெளிவாயிற்று. மீனாட்சி பொறுப்பில்லாமல், இலக்கில்லாமல் வாழ்வதற்கு, ஒரு முன்னோடி அவள் வீட்டிலேயே இருக்கிறது. காட், குழந்தைகளுடன் நேரம் ஒதுக்க முடியாதவர்கள் குழந்தைகளை ஏன் பெறுகிறார்கள்? மீனாட்சி, அவள் அம்மா, அப்பா, மூவருமே கண்ணாமூச்சி விளையாட்டு ஆடுவதில் தேர்ந்தவர்கள் என்று தோன்றிற்று. ஒருவர் மற்றவரை ஏமாற்றிக் கொண்டு, ஏமாற்றப்படுவதை கண்ணில் படாததுபோல் நடித்துக் கொண்டு -

இதைப் பற்றி எரிக்கிற்கு எழுத வேண்டும் என்று தோன்றிற்று. எரிக்கின் அம்மாவுக்கு வேறு ஓர் ஆண் சினேகம் ஏற்பட்டபோது, அவனுடைய தந்தை அவளை விவாகரத்து செய்தார். ''அவர்கள் பிரிந்து போனது எனக்கு வருத்தமாக இருந்தாலும் அவர்களுக்கு வேறு வழியில்லை என்று

## ஸ்ரீ பிரசாத். ஒளிபடைத்த கண்களும், பெரிய காதுகளும் இருந்தால், அதிர்ஷ்டமாம்.



இவன் கிடந்தது குப்பைத் தொட்டியில்;

காப்பாற்றியது... **உதவும் கரங்கள் — வித்யாகர்**

இச்சிறுவனுக்கு ''உதவும் கரங்கள்'' தான் அன்பு இல்லம் தவிர, வயதானோர், உடல் ஊனமுற்றோர், மனநிலை குன்றியவர்கள், ஆதரவற்றோர் ஆகிய 250-க்கும் அதிகமான பேர்களுக்கு இது கருணை இல்லம்.

''உதவும் கரங்களுக்கு'' அறக்கட்டளைகளிலிருந்தும் அரசு நிறுவனங்களிலிருந்தும் உதவி கிடைப்பதில்லை. உங்களைப்போன்ற கொடையாளர்கள்தான் ஆதரவு தருகின்றனர். எனவே, நீங்கள் வழங்குவதைக் கவனமாகவும், சிக்கனமாகவும், அதிகபட்ச பேர்களுக்கும் அளித்து உதவுகிறோம்.

நீங்கள் பணம், பழைய ஆடைகள், பாத்திரங்கள் அல்லது மளிகை சாமான்களை எங்களுக்கு வழங்கலாம். ஏற்றுக் கொள்ளுகிறோம்.

நீங்கள் பிறந்த நாள், திருமணம் போன்ற சுப நாட்களிலும், இறந்தோரின் மறைவு நாட்களிலும்கூட இங்குள்ளவர்களுக்கு 'ஒரு வேளை உணவு' வழங்கலாம்.

---

**நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு**

---




இன்றே தொடர்பு கொள்ளுங்கள்:
**''உதவும் கரங்கள்''**
460, என்.எஸ்.கே. நகர (அண்ணா வளைவின் அருகில்)
சென்னை-600 106. போன்: 42 61 41

- - - - - - - - - - - - - - - - - - - - - - - -

அன்புடையீர்,
'உதவும் கரங்க'ளில் உள்ள ஆதரவற்றவர்கள் என்போன்ற நன்கொடையாளர்களின் உதவியால்தான் வாழ்ந்து வருகிறார்கள் என்பதை அறிய என் நெஞ்சம் நெகிழ்கிறது. இந்த நற்பணிக்கு எனது அன்புக் காணிக்கையாக:

ரூ. 50 ☐, ரூ. 100 ☐, ரூ. 200 ☐ ☐ ரூ ..................... ஐ
செக்/டிடி/M.O. மூலம் அனுப்பியுள்ளேன்.

முகவரி:
திரு/திருமதி ...........................................................................
...........................................................................................
...........................................................................................

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:
**''உதவும் கரங்கள்''**
460, என்.எஸ்.கே. நகர் (அண்ணா வளைவின் அருகில்)
சென்னை-600 106.

CHHAYA/UK/2585

எனக்குத் தெரியும்'' என்றான் எரிக் பதினான்கு வயதில்.

''தொடர்ந்து அவர்கள் சேர்ந்து வாழ்வதில் ஏதும் அர்த்தமில்லை.'' ரொம்ப விவேகமாகப் பேசினாலும் அம்மாவின் பிரிவைத்தாங்க அவன் ரொம்பக் கஷ்டப் பட்டான். இப்போது அவன் எழுதும் கடிதங்களில் அவன் தெளிந்து விட்டது தெரிகிறது.

எது சரி எது தப்பு என்று புரியாத குழப்பம் மீராவை ஆட்கொண்டது. ஆனால் வீட்டு மனிதர்களிடையேயே வேஷம் போடுவது மிகக் கேவலமான விஷயம் என்று நிச்சயமாகத் தோன்றிற்று. தன்னுடைய பலவீனத்தை மறைக்க மைதிலியின் மேல் பழியைப் போட நினைக்கும் மிஸஸ் செல்லப்பன் நல்ல கொள்கைகளே இல்லாதவள் என்று கோபம் வந்தது. மைதிலியைப் பற்றி அவளுக்கு என்ன தெரியும்?

அம்மாவிடம் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்வது தமாஷாக இருக்கும். அம்மாவிடம் எதைப் பற்றி வேண்டுமானாலும் கூச்சமில்லாமல் பேசலாம். அமெரிக்க அம்மாக்கள் போல் அதிர்ச்சி அடையாமல் கண் சொடுக்காமல் கேட்பாள். அதிர்ச்சி தரும்படியாக இதுவரை ஏதும் நடக்கவில்லை என்பது வேறு விஷயம். அம்மாவும் அப்பாவும் ''மேட்ஃபர் ஈச் அதர்'' போட்டிக்குச் சென்றால் நிச்சயம் முதல் பரிசு கிடைக்கும். இத்தனைக்கும் காதல் கல்யாணம் இல்லை. பெரியவர்கள் பார்த்து நிச்சயித்த கல்யாணம். அம்மாவின் வெறும் போட்டோவைப் பார்த்து, அதுவும் மிக மோசமான போட்டோ - அப்பா சரியென்றதை மீராவால் இன்னும் நம்ப முடியவில்லை, ''வெல் - இந்தியாவில் எல்லாம் அப்படித்தான்!'' என்று அப்பா எரிக்குக்கு விளக்கினார். ''கம்ப்யூட்டர்கள் மாதிரி ஜோசியர்கள் சொல்வார்கள் காம்பினேஷன் சரியாயிருக்கிறதா என்று. நம் அதிர்ஷ்டம் சரியாக இருந்தால் சரியாக அமையும். நான் அதிர்ஷ்டம் செய்தவன்.'' அவளும் எரிக்கும் ஏதோ சாகஸக் கதையைக் கேட்டதுபோல் அமர்ந்திருக்க, அம்மா சின்னப் பெண்ணைப் போல முகம் சிவந்தாள். ஹரியின் அப்பா, அம்மா கல்யாணமும் அப்படித்தான் நடந்திருக்க வேண்டும். ஜோசியர்கள் கணக்குத் தப்பாகியிருக்கும். அவளுக்குத் திடீரென்று அத்தை பாட்டி தாத்தாவின் நினைவு வந்தது. அவர்களுடைய பிள்ளை தானாகப் பார்த்துக் கல்யாணம் செய்து கொண்டது அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்பது விசித்திரமாக இருந்தது. அப்படிப்பட்ட ஒரு பிடிவாதத்தை அவர்களுடன் சம்பந்தப் படுத்திப் பார்ப்பது கஷ்டமாக இருந்தது. வேறு ஜாதிப் பெண் என்று அம்மா

# ஈரோடு நகரில் அனைத்திந்திய சந்தை!



**"ஒரே நாளில் இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் வியாபாரம் நடக்கும்" என்று சொல்லப்படுவது ஈரோடு துணிச் சந்தை.**

சாதாரண நூல் சேலைகள், பாலியஸ்டர் லுங்கிகள், பெட்ஷீட்கள் போன்றவை சுமார் முப்பது முப்பத்தைந்து ரூபாய்க்கே இங்கு கிடைக்கும் என்பதால், இந்தியா முழுவதிலுமிருந்து வருகிறார்கள் வியாபாரிகள்.

மொத்தமாகத் துணிச்சந்தை என்றாலும் பனியன் சந்தை தனி. மற்ற துணிகளுக்கான சந்தை தனி. இரண்டும் அடுத்தடுத்த நாட்களில். வெளியூர்களிலிருந்து வருகிற வியாபாரிகள், முதல் நாள் வாங்கும் துணிகளை எந்த இடத்தில் வைத்துவிட்டு அடுத்த சந்தைக்குப் போவது? அந்தக் கவலையெல்லாம் ஈரோட்டில் இல்லை. இரண்டு நாள், மூன்று நாள் வாடகைக்கென்று பலரும் தங்கள் வீடுகளிலுள்ள சில அறைகளைத் (கோடவுனாக) தருகிறார்கள்.

ஆரம்பத்தில் சாதாரணச் சந்தையாக இருந்த இது, அனைத்திந்திய வியாபாரிகளையும் கவருகிற சந்தையாக எப்படி மாறியது?

''ஈரோட்டையும் சேலத்தையும் இணைப்பதற்காக ஈரோட்டை ஒட்டி ஓடும் காவிரியில் (காமராஜர் காலத்தில்) பாலம் கட்டப்பட்ட பிறகுதான் போக்குவரத்து சுலபமானது. அதன் பிறகுதான் ஈரோடு ஒரு வியாபார மையம் என்கிற அளவுக்கு வளர ஆரம்பித்தது'' என்கிறார் கைத்தறித் துணிச் சந்தையின் ஒரு கோடியில் கதர்க் கடை வைத்திருக்கும் தியாகி திருப்பூர்க் குமரனின் இளைய சகோதரர் ஆறுமுகம்.

**- விசுவம்**

காரணம் சொன்னாள். இப்பொழுது அவர்களுடன் சேர்ந்து இருக்கிறார்கள் என்றால் சமாதானமாகி விட்டார்கள் என்று அர்த்தம்.

**வீ**ட்டை அடைந்தபோது வரவேற்பறையில் ஏகக் குரல்கள் கேட்டன. அப்பாவின் நண்பர்கள் யாராவது வந்திருப்பார்கள் என்கிற நினைப்புடன் அவள் டிரைவருக்கு நன்றி சொல்லிவிட்டு வீட்டிற்குள் நுழைந்து பொதுவாக அங்கு அமர்ந்திருப்பவர்களைப் பார்த்து 'ஹலோ' சொல்ல வாயைத் திறந்த போது ஆச்சரியத்தில் விழிகள் அகன்றன. அத்தைப் பாட்டி, தாத்தாவுடன் ஒரு தம்பதியும் உட்கார்ந்திருந்தார்கள்.

''ஹாய் அத்தே!'' என்று அவள் விரைந்து பாட்டியை அணைத்துக் கொண்டாள். ''இப்பத்தான் உங்களைப் பத்தி நினைச்சேன்.'' பிறகு கண்ணைச் சிமிட்டி - ''நிஜமாத்தான். கனா இல்லே'' என்று சிரித்தாள்.

அங்கு உட்கார்ந்திருந்த புதியவர்களைப் பார்த்து, ''நான்தான் மீரா'' என்று கையை நீட்டினாள்.

''நான் வெங்கடேஷ் - யசோதா'' என்று இருவரும் அவள் கையைக் குலுக்கினார்கள். யசோதா மிருதுவாக அழகாக இருந்தாள்.

''உன்னைப் பத்தி அத்தை நிறைய சொல்வார்'' என்று மென்மையாகச் சிரித்தாள்.

இவளை எப்படி பாட்டி தாத்தாவுக்குப் பிடிக்காமல் இருந்தது என்று மீராவுக்கு வியப்பு ஏற்பட்டது. ஆனால் அவர்களுக்குப் பிடிக்காததற்குக் காரணம் வேறு என்று ஞாபகம் வந்தது. ஹரியைப் போல் பார்வையே இல்லாமலிருந்தால் எல்லாருக்கும் ஞானக்கண் சுலபமாகத் திறக்கும் என்று அந்த நிமிஷத்தில் தோன்றிற்று.

(தொடரும்)

பர்கூரில் உள்ள குட்டையூர் வீரப்பன் நடமாடும் பகுதி. அங்கே சத்துணவு மையமும், பள்ளிக்கூடமும் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறோம். மூன்று விவசாயக் கிணறுகள் வெட்டிக் கொடுத்திருக்கிறோம். பயிர்த் தொழிலுக்கான விவசாயக் கடன் வாங்கிக் கொடுத்திருக்கிறோம்....''

கல்லூரி நூலகத்திலிருந்து பத்திரி



☛ பாதைபோடும் மாணவர்கள்.....

# சிக்கய்ய நாயக்கர் கல்லூரி மாணவர்கள் கேட்கும் சிக்கலான கேள்வி!

கல்லூரி வளாகத்தில் ஒரு காதல் கவிதை கேட்கிறது. நீங்களும் கேளுங்கள் :

சிக்கய்ய நாயக்கர் கல்லூரி மாணவர்கள் கிருஷ்ணசாமியும், சிவகுமாரும் பாடுகிறார்கள் :

**''அன்ன நடையழகி,**
**அலங்கார உடை யழகி!**
**பின்னல் சடையழகி - கண்ணம்மா**
**புறப்படம்மா தேர் பார்க்க!''**
**''மதன வடிவழகா,**
**மாமோகச் சொல்லழகா!**
**வண்ண உருவழகா - என் மச்சானே,**
**வரமாட்டேன் தேரு பார்க்க!''**

நொச்சிப்பாளையம், தேவர்மலை என்று சுற்று வட்டாரத்தில் எங்கே கிராமியப் பாடல்கள் கேட்டாலும், மளமளவென்று நோட்டுப் புத்தகத்தில் குறித்து வைத்துக் கொண்டு சேகரித்து வரும் இந்த மாணவர்கள், வெளியூர்களில் மாணவர் முகாம்களில் பாடிக் காட்டுவதும் உண்டு!

என்.சி.சி. யாகட்டும், என்.எஸ்.எஸ். ஆகட்டும், ரத்த தானமாகட்டும், சிக்கய்ய நாயக்கர் கல்லூரி மாணவர்களுக்கு செம குஷி. ''செய்தி வரும் - இத்தனை பாட்டில் ரத்தம் தேவை என்று. உடனே ஓடிப் போய்த் தருவோம்!'' என்கிறார்கள் மாணவர்கள்.

பர்கூர் மலைக் கிராமங்களில் முகாமிட்டு (வீரப்பன் கையில் சிக்காமல்) அப்பகுதி மக்களுக்கு அடிப்படை வசதிகள் அமைத்துக் கொடுத்த பெருமை இவர்களுக்கு உண்டு.

''தாளாடி, பர்கூர், கடம்பூர் பகுதிகளில் பத்து நாட்கள் தொடர்ந்து முகாம்கள் நடத்தியிருக்கிறோம். அரசாங்க அலுவலர்களின் காலடி படாத இடங்கள்... போக்குவரத்து வசதி இல்லாத பகுதி. அதிலும் கைகள் எடுத்துச் சென்று, விழியிழந்தோர் பள்ளி மாணவர்க்குப் படித்துக் காட்டுவது; வாரம் ஒரு முறை பத்து மாணவர்கள் சென்று அவர்களது உறவினருக்குக் கடிதம் எழுத உதவுவது; செங்கோடன்பாளையத்தில் உடல் ஊனமுற்றோர் பள்ளியில் ஃபிஸியோதெரபி செய்வதில் பிஸியாக இருப்பது - எல்லாமே இந்த மாணவர்களுக்கு சர்வசகஜம்.

தேவர் மலையில் பத்து நாள் வகுப்பு: 'ஏன் கல்வி கற்க வேணும்?' என்ற தலைப்பில். கல்வி கற்பது அவசியம் என்று வலியுறுத்த மாணவர் ஊர்வலம்!

''இதை எல்லாம் யார் வற்புறுத்தலினாவது செய்தீர்களா? இல்லை....''

''எங்களுக்கே இன்டரஸ்டிங்காக இருக்கிறது!''

மலையிலுள்ள ஒன்னகரை, தம்மரெட்டி, செங்குளம் பகுதி மக்களுக்கு ரேஷன் கார்டுகளே வழங்கப்படவில்லை. இருபது கிலோ மீட்டர் நடந்து போய், ரேஷன் கார்டு கொண்டு போய்க் கொடுத்த போது, ஆச்சரியப்பட்டுப் போய் மாணவர்களைப் பார்த்தார்கள் அந்த மக்கள்.

என்.எஸ்.எஸ். நாட்டு நலப் பணி முகாமுக்குப் பிறகு அணைக்கரைப் ப[illegible]யில் தொழுநோய் குறைந்திருக்கிறது [illegible]கிறார்கள் மாணவர்கள்.

ஒவ்வொரு வருடமும் பதினைந்து கிலோ மீட்டர் வரை பாதை அமைக்கிறார்கள்.

இந்த மாணவர்கள், அரசுக்குக் கேட்கும் ஒரே கேள்வி : ''மலைவாழ் மக்களின் மேம்பாட்டுத் திட்டங்களுக்கு ஒதுக்கப்படும் பணத்தை என்ன செய்கிறீர்கள்?''

சிக்கய்ய நாயக்கர் கல்லூரி மாணவர்கள் கேட்பதில் நியாயம் உண்டு.

- சித்தார்த்

# ஒரு புத்திசாலித்தனமான அடி



## ஐடிபிஐ

## முதலீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்து முதலீட்டு வரியில் ஆதாயம் பெறுங்கள்.

நிலம், கட்டிடம், ஆபரணங்கள், பங்குகள் போன்ற நீண்டகால முதலீட்டு ஆதாயத்திற்கு வருமான வரி உண்டு. இவ்வரியிலிருந்து விலக்கு பெற, உங்கள் முதலீட்டை முழுமையாக பெற மற்றும் இதிலிருந்து லாபமும் பெற ஐடிபிஐ முதலீட்டு பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

- பத்திரங்கள் ஆண்டு முழுவதும் சம விலையில் கிடைக்கும்.
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு எண் 54 E ன் கீழ் முதலீட்டு ஆதாய வரிவிலக்கு.
- பிரிவு 80 L ன் கீழ் வருமான வரியில் லாபம்.
- செல்வ வரிச்சட்டம் 1957 பிரிவு எண் 5 (1) (XVIE) கூடவே பிரிவு 5 (1 A) ன் கீழ் ரூ. 5 லட்சம் வரை வருமான வரியில் லாபம்.
- வருடத்திற்கு 9% என்ற விகிதத்தில் 6 மாதத்திற்கு ஒரு முறை வட்டி வழங்கப்படும்.
- நான்-ரெஸிடெண்ட் இந்தியர்களின் முதலீடுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகளுக்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாக ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்போது கழிக்கப்பட மாட்டாது.
- வெளியூர் காசோலைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டு அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

## நாட்டின் தொழில் வளர்ச்சியிலும் பெறும் பங்கு.

Sobhagya/IDBI/91 Tam. Rev.



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபீசை அணுகுங்கள். அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்.

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கப் பரேட், பம்பாய்-400 005. போன்: 218 9111/21.

**நா**ம்தான் சரியாகப் படிக்க முடியலை நம்ம குழந்தைகளாவது நன்றாகப் படிக்கட்டுமே என்று எனது குழந்தைகளை கான்வெண்டில் சேர்த்தேன்.

# ஜஸ்ட் ஏ மினிட்



# கஜா!...



கொஞ்சநாள் வரைக்கும் என் கணவர், குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுத்து அவர்கள் ஹோம் ஒர்க் செய்ய மிகவும் உதவியாக இருந்தார். ஆனால் அவருக்கு, ஆபீஸ் வேலை அதிகமாக இருந்ததால் அவரால் குழந்தைகளுக்கு ஹெல்ப் பண்ண முடியவில்லை.

குழந்தைகள் ஹோம் ஒர்க் செய்ய எனது உதவியை நாடும் போது எனக்கு மிகவும் வேதனையாக இருக்கும். அதுவும் இங்கிலீஷ்கிராமர் சம்மந்தமாக அவர்கள் கேட்கும் சந்தேகங்களுக்கு பதில் சொல்ல முடியாமல் திண்டாடினேன்.

எனக்கு இங்கிலீஷ் தெரியாது என்பதை குழந்தைகளிடம் சொல்லிக் கொள்ளவும் முடியவில்லை.

வாரப் பத்திரிக்கை ஒன்றைப் புரட்டும் போது "வீட்டிலிருந்தபடியே இங்கிலிஷ் கற்றுக் கொள்ளலாம்" என்ற விவேகானந்தா கல்வி நிலையத்தின் விளம்பரம் கண்ணில் பட்டது.

ட்ரை பண்ணிப் பார்க்லாமே என்று, அவரது சம்மதத்துடன் விவேகானந்தா கல்வி நிலையத்தில் சேர்ந்தேன்.

முதல் மூன்று மாதங்களில் வாக்கியங்களை அமைக்கப் பழகி, ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டேன்.

அடுத்த மூன்று மாதங்களில் அவர்கள் சொல்லியிருந்தபடி பயிற்சிகளைச் செய்து பழகி "ஸ்போக்கன் இங்கிலீஷைக்" கற்றுக்கொண்டேன்.

இப்பொழுது குழந்தைகளுக்கு, என்னால் இங்கிலீஷ் கிராமரை அவர்களுக்குப் புரியும் வகையில் சொல்லிக் கொடுக்க முடிகிறது.

குழந்தைகளோட சேர்ந்து நானும் இங்கிலீஷில சரளமாகப் பேசும் போது எனக்கே ரொம்ப பெருமையா இருக்கு!

– Mrs. ஜானகி சுந்தர்



# ஸைனர்ஜிக் கலெக்டர்

"கடந்த மழையின் போது எங்கெங்கெல்லாம் மழை நீரைச் சேமிக்க முடியுமோ, அங்கெல்லாம் சேமித்தோம். சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் அதற்கு முழுமையான ஒத்துழைப்புக் கொடுத்தார்கள்'' என்று நம்மிடம் பேசத் துவங்குகிறார் பெரியார் மாவட்ட ஆட்சித் தலைவர் ரா. கண்ணன்.

''சாண எரிவாயுவைப் பயன்படுத்துவதில் பெரியார் மாவட்டம் இந்தியாவிலேயே இரண்டாவது இடத்தைப் பெற்றிருக்கிறது'' என்று பெருமைக்குரிய செய்தியைச் சொல்லும் கலெக்டர், மாவட்டம் முழுவதிலும் உள்ள அறுநூறு மகளிர் மேம்பாட்டுக் குழுக்களை ஆயிரமாக உயர்த்துவதில் தீவிரம் காட்டிக் கொண்டிருக்கிறார்.

முந்நூறு சவரன், நானூறு சவரன் என்று பெண்களுக்கு வரதட்சணை கொடுத்துத் திருமணம் செய்வதென்பது இந்த மாவட்டத்தில் சர்வசாதாரணமாக நிகழ்கிற ஒன்று என்றாலும், ''வரதட்சணை விஷயம் என்பதையெல்லாம் இங்குள்ளவர்கள் திருமணத்திற்கு முன்பே கறாராகப் பேசிக் கொள்கிறார்கள்; பெண் வீட்டாரும் தருவதற்குத் தயாராக இருக்கிறார்கள் என்பதால், திருமணத்திற்குப் பிறகு வரதட்சணைக் கொடுமை என்பதெல்லாம் இங்கு கிடையாது'' என்கிறார் கலெக்டர்.

''இம்மாவட்ட மக்கள் பொதுவாகவே கடின உழைப்பாளிகள்; சாதுவானவர்கள். ஆயினும் பெண் வயதுக்கு வந்தவுடனேயே உடனடியாகத் திருமணத்தை முடித்து விட வேண்டுமென்கிற மனோநிலை சிலரிடம் இருக்கத்தான் செய்கிறது. அதை மாற்றுவதற்காகத்தான் விழிப்புணர்ச்சி இயக்கங்களை நடத்திக் கொண்டிருக்கிறோம்'' என்கிறார்.

போலியான 'சி' - ஃபாரங்களால் மஞ்சள் வியாபாரிகளுக்கு எழுந்துள்ள பிரச்னையைப் பற்றிக் குறிப்பிட்ட போது, ''அது முழுக்க முழுக்க விற்பனை வரித் துறையினர் சம்பந்தப்பட்ட விஷயம். அது தனித் துறை. அதில் நான் எப்படித் தலையிட முடியும்? அதே போல் ஈரோடு நகரப் பிரச்னையை எடுத்துக் கொண்டால் அது முழுக்க முழுக்க நகராட்சி கவனிக்க வேண்டிய ஒன்று. அவர்களுக்கென்று தனி இயக்கம் இருக்கிறது. போக்குவரத்து என்று எடுத்துக் கொண்டால் அது போலீஸ் துறையைச் சேர்ந்தது. அதுவும் தன்னிச்சையாக முடிவுகளை எடுக்கலாம். கலெக்டரைக் கேட்க வேண்டிய கட்டாயமில்லை!'' என்று நடைமுறையில் தமக்குள்ள பிரச்னைகளை ஒப்புக் கொள்கிறார்.

எப்படியிருந்தாலும் அனைவருடனும் சுமுகமான உறவையே வைத்துக் கொண்டிருக்கிறார். நாம் சென்றிருந்த போது நடந்த மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்தில், ஆளுங்கட்சியைச் சேர்ந்த ஒரு பெண் எம்.எல்.ஏ., ''சத்துணவு மையங்களிலாவது எங்களுடைய கட்சிக்காரர்களை நியமிக்கக் கூடாதா?'' என்று கேட்டபோது, கலெக்டர் கண்ணன் அதை மிகவும் நாசூக்காகச் சமாளித்த விதத்தைப் பாராட்டத்தான் வேண்டும்.

மற்ற மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகங்களில் உள்ள கம்ப்யூட்டர் சாதனங்கள் எந்த அளவுக்கு உபயோகப் படுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றனவோ, இவர் அலுவலகத்தில் அது முழுமையாகப் பயன்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறது. மாவட்டத்திலுள்ள எந்த குக்கிராமத்தின் புள்ளி விவரங்கள் வேண்டும்? அடுத்த நிமிஷமே கம்ப்யூட்டர் தருகிறது. ''இதனால் பைல்களைப் புரட்டிக் கொண்டிருக்கும் அநாவசியமான காலவிரயம் தடுக்கப்படுவதோடு, எந்தவொரு நடவடிக்கையையும் உடனடியாக எடுக்க முடிகிறது!'' என்கிறார் கண்ணன்.

கலெக்டருக்கு மிகவும் பிடித்தமான வார்த்தை Synergic. என்ன அர்த்தம்? அகராதியைப் புரட்டிப் பார்க்குமாறு உங்களை நான் ஊக்குவித்தால், நீங்கள் ஒத்துழைத்தால் அதுவும் கூட ஸைனர்ஜிக் தான்!

- இளங்கோவன்



என்ன சம்பந்தம்?



வாழ்த்து.



பகிரங்கக் கடிதம்



காவிக்கு டாடா



வெற்றி பெறுவாரா?

## நீங்கள் கேட்டவை - தராசு

● பா. சிவகுமார், குஞ்சரம்.

**? காவிரி நீர் பிரச்னைக்கும் நடிகர் ராஜ் குமாருக்கும் என்ன சம்பந்தம்?**

! காவிரி நீர்ப் பிரச்னைக்கும் வீடு வாச லிழந்து விரட்டப்பட்ட அப்பாவி பெங்க ளூர்த் தமிழர்களுக்கும் உள்ள சம்பந்தத்தை விட அதிகமாகவே இருக்கிறது.

● ந. இளங்கோவன், தலைஞாயிறு.

**? சமீபத்தில் விரும்பிப் படித்த புத்தகம்?**

! கல்கியில் தொடராக வந்த போது படித்த ''மணல்வெளி மான்கள்'' நாவ லுக்கு, '1990 ஆம் ஆண்டின் சிறந்த நாவல் பரிசு' கிடைத்திருக்கிறது என்பதை அறிந்த போது, நூல் உருவில் மறுபடி படித்தேன், ரசித்தேன். வழங்கியவர்கள் அமுதசுரபி - கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் கூட்டமைப்பு. வையவனுக்கு வாழ்த்து.

● லீலா ராம், தக்கலை.

**? அத்தியாவசியப் பண்டங்களின் விலை யைக் குறைத்துள்ளதாக அரசு அறிவித் துள்ளது?**

! வெளி மார்க்கெட்டை விடக் கூட்டுறவு அங்காடிகளில் சற்று மலிவாகக் கிடைக்க, அரசே கொள்முதல் செய்து விநியோகிக்க ஏற்பாடு நடந்திருக்கிறது. நல்ல காரியம் தான். ஆனால் இது நிரந்தரத் தீர்வு அல்ல. ஆரம்பத்தில் சரியாக இருக்கும். போகப் போக க்யூ நீள, தரம் குறையும். நிரந்தரப் பரிகாரம், மன்மோகன் சிங்கின் செயல் திறனில்தான் இருக்கிறது. அவருக்குப் போதிய அவகாசம் தர வேண்டியதும் அவ சியம்தான். பார்ப்போம். பொருளாதாரம் சிறக்கக் கொள்கைகளில் மாற்றம் தேவை என்று தற்போது உணரப்பட்டிருப்பதே பெரிய முன்னேற்றம்!

● கி. ராமதாஸ், சென்னை - 23.

**? ரத யாத்திரை தொடர்பாக முரளி மனோஹர் ஜோஷிக்கு முல்க்ராஜ் ஆனந்த் எழுதிய பகிரங்கக் கடிதம் பற்றி...?**

! கருத்து மாறுபாட்டை வெளியிடுவதில் ஒரு தவறும் இல்லை. ஆனால் அதை நாகரிகமாகச் செய்கிறோமா என்பதையும் பார்க்க வேண்டும். முல்க்ராஜ் ஆனந்திடம் இத்தகைய பாஷையை யாரும் எதிர்பார்க்க வில்லை என்பது ஒருபுறமிருக்க, ஹிந்து அதைப் பிரசுரித்தது அதை விடவும் அதிர்ச்சிதான்!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**? தாம் இதுகாறும் விரும்பியுடுத்தி வந்த காவி உடைகளுக்கு டாடா காண்பிக்க என். டி. ராமராவ் முடிவு செய்திருப்பது எதைக் காட்டுகிறது?**

! வேஷம் கலைத்து அடுத்த புரொடக்ஷ னுக்காக வேறு காஸ்ட்யூம் - மேக்அப் போட வேண்டிய நேரம் வந்து விட்டது என்பதைத்தான்.

● ஆர். மோகன் ராஜீவ்பிரியன், காட்டுக் கோட்டை ❑

**? காவிரி நீர் பிரச்னையை வைத்துக் கர்நாடகத்தில் தமது மதிப்பை உயர்த்திக் கொள்ள நினைக்கிறார் பங்காரப்பா. அதே பிரச்னையை வைத்து அவரைத் தூக்க நினைக்கிறார்கள் எதிர் கோஷ்டியினர்.... யார் வெற்றி பெறுவார்கள்?**

! ஆக இரு தரப்பினருமே கர்நாடக மக்கள் நலனில் அக்கறை காட்டவில்லை. சுயநலம்தான் செயல்படுகிறது. இதைப் புரிந்து கொண்டால் வெற்றி கர்நாடக மக்க ளுக்கு.

● எஸ். எல். அமீன், களியக்காவிளை.

**? உங்களால் பாராட்ட முடியாத சமீபத்திய அரசியல் சாணக்கியம் எது?**

! அஜீத் சிங்கைத் திருவனந்தபுரத்துக்கு வந்து சந்திரசாமியும் தாமும் சந்திக்க வில்லை என்று கூறிய சு. சுவாமி, ஆனால் ஜனதா தளத்தை உடைக்கத் தாம் முயற்சி மேற்கொண்டிருப்பது உண்மை என்றும் அது தற்போது ஒரு தேசிய அவசியம் என்றும் குறிப்பிட்டதுதான். இம்மாதிரி காரியங்கள் சாணக்கியம் அல்ல சாணி யிஸம்.

# 'ஜெ' தனி விமானத்தில் தில்லியிலிருந்து


சாணக்கியமா?


தனி விமானம்


வீழ்ச்சி


பாராட்டு.


பாம்பின் கால்...

● பேர்ணாம்பட் எம். ரஃபி,
சென்னை - 7.

? ஜெயலலிதா டில்லியிலிருந்து தனி விமானத்தில் சென்னை வந்தது குறித்து...?

! செலவு 12 லட்சம் அல்ல; ஆறு லட்சம் தான் என்றும், அரசுச் செலவு அல்ல கட்சிச் செலவுதான் என்றும் விளக்கம் தரப்பட்டாலும் திருப்தி அளிக்கவில்லை. தலைவர்கள் சிக்கன விஷயத்தில் முன்மாதிரியாக இருப்பது அ வ சி ய ம். பெட்ரோலியப் பொருள்கள் வீணாவது தேசிய நஷ்டம்.

● மூக. தி. க. பாலசுப்பிரமணியன், முசிறி.

? கோர்பசேவின் வீழ்ச்சி, மிகுந்த மன வருத்தத்தை அளிக்கிறதல்லவா?

! அதை விட அதிகமாக உலக வரை படத்தில் பாதியை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த ஒரு நாடு சிதறுண்டு போனது துயர் அளிக்கிறது. பல்வேறு மொழி பேசும் மக்களின் கூட்டமைப்பை இதுவரை கட்டிக் காத்தது கம்யூனிஸம்தான். கோர்பசேவ் சுதந்திரங்களை வழங்கி, கட்டுக்களைத் தளர்த்தவும் சரிந்து, பிரிந்து விட்டன. இதுவரை சோவியத் யூனியனை ஆண்டவர்கள் நிர்பந்தத்தால் மக்களை இணைத்தார்களே தவிர, இதயங்களை இணைக்கவில்லை என்பது இதிலிருந்து தெளிவாகிறது. நமக்கும் ஒரு பாடம். மக்களின் மனங்களைப் புரிந்து கொண்டு ஆள வேண்டும் என்பது இதற்காகத்தான். இன்று காமன்வெல்த் என்ற தளர்வான அமைப்பில் மூன்று முன்னாள் சோவியத் மாநிலங்கள் இணைந்திருந்தாலும் அவை தனித்தனி நாடுகளே. இப்போது உலகுக்கு மிகப் பெரிய கவலை அளிக்கும் விஷயம், அணு ஆயுதங்களை உடைய நாடுகளின் எண்ணிக்கை எக்கச்சக்கமாக அதிகரித்து விட்டதுதான்.

● பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி.

? 'கோபல்லபுரத்து மக்கள்' நாவலுக்கு சாகித்ய அகாதமி விருது கிடைத்துள்ளதே, மகிழ்ச்சிதானே?

! சென்னையில் சாகித்ய அகாதமி அலுவலகத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியாமல் கர்நாடகத்துக்குப் பறிகொடுத்து விட்டபோதிலும், சா கி த் ய அகாதமி விருதையாவது நம்மில் ஒருவர் பெற முடிந்ததே, மகிழ்ச்சிதான். கி. ராஜநாராயணனுக்குப் பாராட்டு. விகடனுக்கு வாழ்த்து. வைரவிழா ஆண்டின் ஒரு ஜொலிப்பு.

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

? திராவிட இயக்கப் பவழவிழா குறித்துச் சில வரிகள்?

! திரண்ட பெருங்கூட்டம் கட்சியின் தொண்டர்கள் கட்டுக்கோப்பாக இருப்பதை உணர்த்தியது. ஏற்பட்ட சில அசம்பாவிதங்களைத் தவிர்த்திருக்கலாம் என்றாலும் இத்தகைய பெரிய கூட்டத்தை நோக்க சில்லறைச் சம்பவங்களே. ஆனால் பெரிய குறை, தொண்டர்களுக்கு எதிர்காலம் பற்றிய ஒரு கணிப்பு, ஒரு வழி காட்டல், ஒரு புதிய கொள்கை விளக்கம் என்று ஏதும் இல்லாமல் போனதுதான். தலைவர்கள் தவறி விட்டார்கள்.

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.

? கேள்வி கேட்டவர் பெயரை 'வ. தே. பா.' என்று குறிப்பிட்டிருக்கிறீர்களே, 'வந்து தேடிப் பார்' என்று அர்த்தமா?

! வந்து தேடிப் பார்த்தால் வ. தே. பாலசுப்பிரமணியன் என்ற பெயர் அகப்படும் என்று அர்த்தம்.

● கே. பாலமுருகன், சித்தாத்தூர்.

? கலவரங்களைக் கர்நாடக அரசே தூண்டி விட்டதாக ஹெக்டே கூறுகிறாரே?

! பாம்பின் காலைப் பாம்பறியாமல் நாமா அறிவோம்!

● சுபாஷினி சங்கர், திருவெண்ணெய் நல்லூர்.

? நேருவின் அரசியலுக்கும் நரசிம்மராவ் அரசியலுக்கும், வித்தியாசம்?

! A to Z எல்லாமேதான் மாறிப் போச்சே!

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். மோகன் ராஜீவ் பிரியன்,
மே/பா ஆர். ராமசாமி,
ஆயர்பாடி,
காட்டுக்கோட்டை (அஞ்சல்)
ஆத்தூர் (வட்டம்) 636 121.

# திரும்பியது சரியா?

# 32

'ஹோப்' வைரம் பாதுகாப்பான இடத்தில் இருக்கிறது. அதிகாரிகள் கடத்தல் கூட்டத்தைப் பிடிக்க நடத்திய நாடகம். இந்திய அரசு நெடுநாளாகத் தேடிக் கொண்டிருந்த மூன்று துணிச்சலான குற்றவாளிகள் பிடிபட்டனர். அவர்களை இந்தியாவுக்குத் திருப்ப ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தி வெளிவரச் சில மணி நேரங்களே ஆயின.

அன்று மாலை அமெரிக்கத் தொலைக் காட்சி நிலையங்கள் போட்டி போட்டுக் கொண்டு செய்திகளை ஒளிபரப்பின.

தக்க நேரத்தில் அதிகாரிகளுக்கு உதவி செய்த ஸாம்தான் முதல் முதலாக பேட்டி காணப்பட்டான். நிர்மலாவின் அல்லலைக் கேட்ட ஹாலிவுட் சினிமாக்காரர்கள் இதை ஒரு படமாக எடுக்கலாமே என்று கூட நினைத்தார்கள். ரகுராமன் தோளில் கட்டுடன் தன் பங்கைச் சொன்னான். வைத்தியநாதன், பூர்ணம் இருவரும் அமெரிக்கா முழுவதும் தொலைக் காட்சியில் தங்களைப் பார்ப்பார்கள் என்று நினைக்கவேயில்லை. ராபர்ட் வார்னர், டேவிட் பாமர், மைக்கேல் விண்டன்... என்று ஒவ்வொருவராக...

கைதிகளின் புகைப்படங்களை மட்டுமே காட்டினர்.

நடந்ததை விவரமாக மறுநாள் சொல்லப் போவதாக எஃப்.பி.ஐ. அறிவித்தது. அமெரிக்கா முழுவதும் மக்கள் ஆர்வத்துடன் காத்திருந்தார்கள்.

மறுநாள் காலை 9.00 மணி.

'ஜே. எட்கர் ஹூவர்' கட்டடத்தின் பெரிய அறையில் கூடியிருந்தவர்களைப் பார்த்தால் வியப்பு ஏற்படும்.

கைதிகள் தனியாக ஒரு பக்கம் உட்கார்ந்து இருந்தனர்.

ரகுராமனும் நிர்மலாவும் அடுத்தடுத்து இருந்தனர்.

வைத்தியநாதன், பூர்ணம் இருவரும் ரகுராமனுக்கு இன்னொரு பக்கத்தில் இருந்தனர்.

ஸாம், கறுப்பு அமெரிக்கன் ஒரு பக்கம்.

டேவிட் பாமர், மைக்கேல் விண்டன், ராபர்ட் வார்னர் மூவரும் தனியாக ஒரு பக்கம் இருந்தனர். மற்ற அதிகாரிகள் மேசையைச் சுற்றி இருந்தனர்.

தொலைக்காட்சிக் காமிராக்கள் இயங்கத் தொடங்கின.

ராபர்ட் வார்னர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தான்.

''இது ஒரு விசித்திரமான கடத்தல் திட்டம், 'ஹோப்' வைரத்தை விட விலை யுயர்ந்த வைரங்களும் மற்ற நகைகளும் மியூசியத்தில் இருக்கின்றன. ஆனால் 'ஹோப்' வைரத்தை ஏன் கடத்தத் திட்டம் போட்டார்கள்?''

ரகுராமன் பதில் சொன்னான்.

''வைரமூர்த்தி ஆசிய சரித்திரப் பேராசிரியராய் இருப்பவர். அவருக்கு இந்தியச் சரித்திரம் தலைகீழாகத் தெரியும். இந்திய நாட்டிற்கு வந்து அங்கிருந்த செல்வங்களைக் களவாடியவர் எவ்வளவோ பேர். சரித்திரமே பேசுகிறது. 'ஹோப்' வைரமும் இந்தியாவிலிருந்து கிடைத்ததுதான் என்பதைக் குறிக்க ஆதாரங்கள் இருக்கின்றன. ஆனால், 'ஹோப்' வைரத்தை யாரும் இந்தியாவிலிருந்து திருடினதாகச் சரித்திரம் இல்லை. உலகத்திலிருக்கும் புகழ்பெற்ற வைரங்களில் இதுவும் ஒன்று. இதைக் கடத்தி இந்தியாவுக்குத்திரும்ப எடுத்துச் சென்றால் புதிய சரித்திரம் உருவாகும். அவ்வளவுதான். 'ஹோப்' வைரத்தை யாருக்கு விற்க முடியும்? அதன் விலை மதிப்புதான் என்ன? யார்தான் நகையாக அணிந்து கொள்ள முடியும்?

''அதைக் கடத்த ஒரே காரணம் தன்னுடைய பெயர் சரித்திரத்தில் இடம்பெற வேண்டுமென்ற வைரமூர்த்தியின் வெறிதான்.''

இதைக் கேட்ட வைரமூர்த்தி பெருமிதப்பட்டுக் கொண்டார். கள்ளக் கடத்தல்காரன் என்று மட்டுமே இன்று அவருக்குப் பெயர் வந்துள்ளது. 'ஹோப்' வைரம் மட்டும் கிடைத்திருந்தால் சரித்திரம் அவரை என்றுமே மறந்திருக்காது என்று ரகுராமன் சரியாகத்தான் சொன்னான்!

ராபர்ட் வார்னர் அடுத்த தலைப்பைத் தொடங்கினான்.

''இந்திய குற்றவாளிகள் மூன்று பேர் என்று 'இண்டர்போல்' செய்தியும் படங்களும் அனுப்பின. ஆனால் இங்கு இருக்கும் வைரமூர்த்தியைப் பற்றி இந்திய அரசுக்குத் தெரியாமல் போனது வியப்பாக இல்லையா? குருமூர்த்தி என்பவர் எங்கே? 'இண்டர்போல்' விரித்த வலைக்குக் கூட குருமூர்த்தி சிக்கவில்லையே?'' என்றான்.

வைரமூர்த்தி சிரித்துக் கொண்டதை நிர்மலா கவனித்தாள்.

''இவர் உலகை ஏமாற்ற நினைத்தார். ஆனால் ஸி. பி. ஐ., எஃப்.பி.ஐ.யிடம்

இவர் ஏமாந்து விட்டார்'' என்று தொடங்கி, தான் கண்டுபிடித்ததை விவரமாகச் சொன்னாள்.

நிர்மலாவை வைரமூர்த்தியின் குடியிருப்பிலிருந்து அழைத்துப் போக ராபர்ட் வந்த போது ஒரு நிகழ்ச்சி நடந்தது. ஸாம், வைத்தியநாதன் இவர்கள் உதவியுடன் தாடிக்கார மனிதரை ஆம்புலன்ஸில் அனுப்பி விட்டு வர ராபர்ட் போனான். நிர்மலாவும் பூர்ணமும் உள்ளே நின்றிருந்தனர்.

நிர்மலாவின் பார்வை புத்தக அலமாரி மீது போனது. சட்டென்று ஓரிடத்தில் நிலைத்தது. அங்கே இருந்த படத்தில் இரண்டு சிறுவர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் இரட்டைப் பிறவிகள். அந்தப் படத்தை அவள் கையிலெடுத்துப் பார்த்தாள்.

அதன் பின்னால் வைரமூர்த்தி, குருமூர்த்தி' என்று எழுதப்பட்டு ஓர் ஆண்டும் குறிக்கப்பட்டிருந்தது.

நிர்மலாவுக்கு உடனே எல்லாம் புரிந்துவிட்டது. சி.பி.ஐ. பயிற்சி அவளுக்குத்



துப்புத் துலக்கும் அறிவை வளர்த்திருந்தது.

''வைரமூர்த்தி உண்மையிலேயே ஒரு சரித்திரப் பேராசிரியர்தான். சந்தேகமே யில்லை. அவர் அமெரிக்கா வந்து டாக்டர் பட்டம் பெற்றது, யூனிவர்சிட்டியில் நல்ல மதிப்புடன் இருந்து வந்தது - எல்லாம் உண்மையாகத்தான் இருந்தது - சில ஆண்டுகளுக்கு முன்னால்வரை.

''வைரமூர்த்திக்கு இந்தியாவில் குரு மூர்த்தி என்ற தம்பி இருந்தார். இருவரும் இரட்டைப் பிறவிகள்.'' நிர்மலா நிறுத்தி னாள்.

அறையில் அமைதி ஏற்பட்டுச் சில நிமிடங்கள் ஆயின. வைரமூர்த்தியின் முக பாவம் 'மாறிக் கொண்டே வந்தது.

நிர்மலா மேலே தொடர்ந்தாள் :

''குருமூர்த்தி எப்படியோ அமெரிக்கா வந்தார். இந்தியாவில் கள்ளக்கடத்தல், கொள்ளை என்றெல்லாம் செய்தவருக்கு ஒரு 'டூரிஸ்ட் விசா' வாங்கிக் கொண்டு வருவதா கஷ்டம்! வந்தவர் 'ஹோப்' வைரத்தைப் பார்த்தார். மோகம், வெறி யாயிற்று. அண்ணன் சரித்திரப் பேராசிரி யர். புகழ்பெற்றவர். தனக்கும் சரித்திரத்தில் சமபங்கு வேண்டும் என்ற வெறி குரு மூர்த்தியைப் பிடித்துக் கொண்டது.''

எல்லோரும் வைரமூர்த்தியையே பார்த்தார்கள்.

''குருமூர்த்தியின் வெறி பாசத்தையும் வென்று குருட்டு வெறியானது. வைர மூர்த்தியைப் போதை மருந்துக்கு இலக் காக்கினார். அறையில் அடைத்து வைத் தார். தாமே வைரமூர்த்தி போல் நடித்தார். ஒரே மாதிரித் தோற்றமுள்ள இரட்டைப் பிறவிகளானதால் குருமூர்த்தி வைரமூர்த்தி யானார். வைரமூர்த்தியினுடைய மாணவர் களை வைத்துக் கட்டுரைகள், ஆராய்ச்சிகள் நடத்தினார். யூனிவர்சிட்டியில் இருக்கும் போது மற்ற பேராசிரியர்களுடன் நாசூக் காகப் பேசி நடந்து கொண்டார். ஆனால்... சரித்திரம் பற்றி நிறைய படித்துக் கொண் டார். கேட்போர் பாராட்டுமளவு தேவை யானவற்றை அவ்வப்போது படித்துக் கொண்டார். பழைய காலத்து பி.ஏ. படிப் பாளி குருமூர்த்தி... இடையில் வாழ்வில் திசைமாறியவர்.... போதை மருந்துகளால் கடுமையாகத் தாக்கப்பட்ட உண்மையான வைரமூர்த்தி இப்போது மருத்துவமனை யில் இருக்கிறார். இத்தனை நாள் வைர மூர்த்தி என்று நாமெல்லாம் நம்பிய குரு மூர்த்தி உங்கள் முன்னால் அதோ இருக் கிறார்'' என்றாள் நிர்மலா.

நிர்மலாவின் பேச்சைக் கேட்டு அறையிலிருந்த பலர் வியப்பு மேலிடக் கைதட்டினார்கள். கையைத் தட்டப் போன ரங்கதுரை சட்டென்று நிறுத்திக் கொண் டான். வைரமூர்த்தியின் பார்வை ரங்க துரையை எரித்தது.

ராபர்ட் வார்னர் அடுத்த கேள்வியைத் தொடுத்தான்.

''இப்போது உண்மையான 'ஹோப்' வைரம் எங்கே?''

இந்தக் கேள்விக்கு டேவிட் பாமர் அழகாகப் பதில் சொன்னார். சுருக்கமாக வும் சொன்னார்.

''நானும் மைக்கேல் விண்டனும் ஒரு நாள் இரவு 'ஹோப்' வைர மாலையை வேறொரு இடத்தில் கொண்டு வைத் தோம். போலி வைரமாலையைத்தான் கடத்தல்காரர்கள் எடுத்துக் கொள்ள வேண் டும் என்ற திட்டத்தைப் போட்டது நான், மைக்கேல், ராபர்ட் வார்னர் ஆகிய மூவரும்தான்'' என்று முடித்தார்.

உடனே மைக்கேல் விண்டன் ஒரு சிறு பெட்டியிலிருந்து உண்மையான 'ஹோப்' வைரத்தை எடுத்து அனைவருக்கும் தெரி யும்படி காட்டினார். காமிராக்கள் அதைப் பெரிதாக்கிக் காட்டின.

அதைத் தொலைக்காட்சியில் பார்த்த அமெரிக்க மக்கள் ''ஆ.. ஓ..'' என்று கொண்டாடினர்.

'ஹோப்' வைர மாலையைப் பார்த்துக் கொண்டே இருந்தார் குருமூர்த்தி. 'அதை ஒருமுறையாவது நான் கையால் தீண்ட லாமா' என்று அவர் கெஞ்சுவது போல் இருந்தது அந்தப் பார்வை.

## நூற்றுக்கு நூறு வாங்கும் ரகசியம்!

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகவே ஈரோட்டிலுள்ள கலைமகள் கல்வி நிலையம், பொதுத் தேர்வுகளில் நூற் றுக்கு நூறு சதம் வெற்றி பெற்று வருகிறது.

இது எப்படி சாத்தியம்? பொதுத் தேர் வுக்குச் செல்லும் மாணவிகளுக்கு தனியாக ஒரு தேர்வு வைத்து, அதில் தேர்ச்சி பெறு கிறவர்களைத்தான் பொதுத் தேர்வுகளுக்கு அனுப்புகிறார்களோ, என்று ஒரு சந்தேகம் நமக்கு.

இதைக் கலைமகள் கல்வி நிலை யத்தின் பொறுப்பாளர் செல்வி முத்தையா விடமே கேட்டோம். ''சிலர் உங்களைப் போல்தான் சந்தேகப்படுகிறார்கள். ஆனால் உண்மை அதுவல்ல. பத்தாம் வகுப்பு மாண விகளுக்கும், +2 மாணவிகளுக்கும் நாங்கள் காலை ஏழரை மணிக்கே வகுப்புகளைத்

துவங்கிச் சிறப்புப் பயிற்சி அளிக்கிறோம். இந்தப் பயிற்சியை வருஷ ஆரம்பத்திலிருந்தே நாங்கள் ஆரம்பித்து விடுவதால் எந்த மாணவியும் தோல்வியடையும் வாய்ப்பே இல்லாமல் போய் விடுகிறது. இவற்றோடு, ஒவ்வொரு மாணவிக்கும் எங்கள் ஆசிரியைகள் சொந்தக் குழந்தைகள் போல் தனிப்பட்ட கவனம் செலுத்துவதும் இன்னொரு முக்கிய காரணம்'' என்றார் அவர்.

'பாரதி வித்யாபவன்' என்று இன்னொரு பள்ளி. அங்கு முதல் வகுப்புக் குழந்தைகளுக்கே கம்ப்யூட்டரை அறிமுகப்படுத்துகிறார்கள். அங்கு பணியாற்றும் ஆசிரியைகள் கைக்குழந்தைக்காரிகளாக இருந்தாலும் கவலையில்லாமல் வகுப்புகளுக்குச் செல்லலாம். காரணம், பள்ளி நிர்வாகமே, பள்ளிக்குள் அவர்களுக்காக இலவச க்ரெஷ் ஒன்றை நடத்துகிறது!

வசதியான ஹாஸ்டல், நல்ல உணவு எல்லாம் ஒருபுறமிருக்க தோட்டம், விளையாடுமிடம் என்று இத்தனை விசாலமான திறந்தவெளி எங்கே கிடைக்கிறது! பெற்றோர்கள் பிள்ளைகளைச் சேர்க்கப் போட்டி போடுவதில் வியப்பில்லைதான்!



காலை 7.30 மணி வகுப்பு



செல்வி முத்தையா

கடைசியாக ராபர்ட் ஒரு கேள்வி கேட்டான்!

''இந்த 'ஹோப்' வைரம் எங்கு போனாலும் வைத்திருப்பவர்களுக்குத் தொல்லை கொடுக்கிறது என்று கதைகள் இருக்கின்றன. இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' அவன் பொதுவாக எல்லோரையும் பார்த்துக் கேட்டதாய்த் தோன்றியது.

சற்று நேரம் யாரும் பதில் சொல்லவில்லை. கடைசியில் ரங்கதுரை பேசினான்.

''நிச்சயமாக அது தொல்லை தரும் வைரம்தான். இல்லைன்னா நாங்க மூணு பேரும் இத்தனை வருஷமா இல்லாம இப்ப ஏன் மாட்டிக்கணும்?'' என்று கேட்டான்.

## முடிவுரை

### ஜூலை 4, 1991!

அமெரிக்காவில் விடுதலை நாள் கொண்டாட்டம். ஒவ்வொரு வீட்டிலும் நாட்டுக் கொடியைப் பறக்க விட்டிருந்தனர்.

வாஷிங்டன் டி.சி.யில் 'ஸ்மித்ஸோனியன்' நிறுவனத்துக்கு எதிரிலே ஒரு மேடை அமைக்கப்பட்டிருந்தது.

ஜனாதிபதி ஜார்ஜ் புஷ், திருமதி புஷ் இருவரும் வந்ததும் சரியாக மாலை ஆறு மணிக்கு விழா தொடங்கியது.

மியூசியத்தின் பொருளைக் காத்தது மட்டுமில்லாமல் அமெரிக்க நாட்டின் கௌரவத்தையும் காத்துத் தந்தவர்களுக்குப் பாராட்டு விழா.

அரசு ஒரு லட்சம் டாலர் பரிசளிக்கும் என்று சொன்னதை ஜனாதிபதி நிறைவேற்றினார். ரகுராமன், நிர்மலா, சம்பந்தன், வைத்தியநாதன், ராபர்ட் வார்னர் இந்த ஐந்து பேருக்கும் ஆளுக்கு இருபதாயிரம் டாலர் பரிசளித்தார். டேவிட் பாமருக்கும், மைக்கேல் விண்டனுக்கும் விருதுகள் அளித்தார்.

விழா முடிந்ததும் அரைமணி நேரம் வாண வேடிக்கைகள் நடந்தன.

''ஏம்மா, நிர்மலா... நீயும் ரகுராமனும் மட்ராசுக்கே வந்து கல்யாணம் செஞ்சுக்கப் போறீங்களா?'' என்று கேட்டாள், பூர்ணம்.

நிர்மலா ரகுராமனைப் பார்த்தாள். பிறகு தலைகுனிந்தாள்.

''மாமி, நாங்க இங்கேயே கோவிலிலே செய்து கொள்ளலாம்னு இருக்கோம்... நீங்களும் வந்திருக்கீங்க...'' என்று இழுத்தான் ரகுராமன்.

''அப்படியே நடத்திடுவோம்... எல்லாம் வாஷிங்டன் வைரத்தாலே ஆரம்பித்ததுதானே'' என்றார் வைத்தியநாதன்.

''எந்த வைரத்தைச் சொல்றீங்க?'' என்றான் சம்பந்தன்.

எல்லோரும் சிரித்தார்கள்.

(முற்றும்)

திரும்பிப் பார்க்கிறேன் : 14

# நெஞ்சில் ஓர் ஆலயம்: மனசில் ஒரு குழப்பம்!

சிவாஜி, தம்முடைய 'பிரபு ராம் பிலிம்ஸ்' தயாரிப்பான ஒரு படத்தை நான் டைரக்ட் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். நானும் சந்தோஷமாகச் சம்மதித்தேன். சிவாஜி போன்ற பெரிய ஹீரோக்களின் சொந்தப்படத்தை டைரக்ட் செய்ய வாய்ப்புக் கிடைப்பது என்பது பெருமைக்குரிய விஷயமல்லவா!

சில நாட்களுக்குப் பின் சிவாஜி, ''சமீபத்தில் ஒரு இங்கிலீஷ் படம் பார்த்தேன்; அற்புதமா இருக்கு; அதுல ஒரு அழுத்தமான கதாபாத்திரம் வருது; எனக்கு ரொம்பப் பொருத்தமாயிருக்கும்னு நினைக்கிறேன்'' என்றார்.

''படத்தின் பெயர்?''

"Singer not the Song!" என்றார் சிவாஜி அவருக்கே உரிய பாவபூர்வமான உச்சரிப்பில்.

''படத்தைப் பார்த்துடுவோம்'' என்றேன்.

''நம்ம வீட்டிலேயே பார்த்துடலாம்; ஒரு பிரிண்ட் வரவழைச்சு வைச்சிருக்கேன். இரவு வந்துருங்க.''

அவ்வாறே என் நண்பர்கள் சிலரையும் அழைத்துக் கொண்டு போனேன்.

படம் ஆரம்பிக்கு முன் மறுபடி சிவாஜி அதை சிலாகித்துப் பேசினார். ''இந்த சப்ஜெக்ட் உங்களுக்கு ரொம்பப் பிடிக்கும், பாருங்க. உடனே பூஜை போட்டுட வேண்டியதுதான்'' என்றார்.

பார்த்தேன். சிவாஜி ஏகமாகப் புகழ்ந்து பேசியிருந்த போதிலும் ஏனோ என்னை அந்தப் படம் கவரவில்லை.

விளக்குகள் மீண்டும் ஒளி சிந்திய போது சிவாஜி, ''பார்த்தீங்கல்ல, எவ்வளவு பவர்ஃபுல் கேரக்டர்!'' என்று திரும்பவும் உற்சாகமாகப் பேசினார்.

''இந்தப் படத்தை உன்னால் பிரமாதமா டைரக்ட் பண்ண முடியும், ஸ்ரீதர்! உன் திறமையிலே எனக்கு ரொம்ப நம்பிக்கை, நிச்சயம் ஹிட்தான்!

நான் மௌனமாக சிவாஜியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். 'இவ்வளவு ஆர்வம் காட்டுகிறாரே, அதற்காக ஒப்புக் கொள்வதா? அல்லது மனச்சாட்சியின் கட்டளையை ஏற்று மறுதளித்து அவருக்கு ஏமாற்றத்தை அளிப்பதா?'

என் மனப்போராட்டத்தை அறியாமல், ''பூஜை போட நாள் பார்க்கலாமா?'' என்றார் சிவாஜி எதிர்பார்ப்புப் புன்னகையுடன். அன்றிரவே தம் தாயார் கையால் எனக்கு அட்வான்ஸ் தரக் கூட அவர் ஏற்பாடு செய்திருந்தார் என்பது எனக்குப் பின்னால் தெரிய வந்தது.

நான் ஒரு பெருமூச்சுடன் நிதானமாக, ''அண்ணே! இந்தப்படத்தில் உள்ள ஒரு



• ஏமாற்றத்தை உதறிய பெருந்தன்மை

கேரக்டர் உங்களுக்கு ரொம்பப் பொருத்தமாய் அமையும் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனா ஒட்டுமொத்தமாப் பார்க்கும்போது படத்தில் எனக்கு ஈடுபாடு ஏற்படவில்லையே'' என்றேன்.

சிவாஜி என் எண்ண ஓட்டத்தைப் புரிந்து கொண்டார். தொடர்ந்து பேசத் தூண்டினார்:

''ம்... அதனால....''

இந்தத் தூண்டுதல் என் கருத்தை வெளியிடுவதை இலகுவாக்கியது.

''அண்ணன் தப்பாய் எடுத்துக் கொள்ளக் கூடாது. எப்போ எனக்கு ஒரு ஈடுபாடு ஏற்படலையோ, அதற்கப்புறம்

**டைரக்டர் ஸ்ரீதர்**



## டீ.வி:

அலுமினிய வேர்கள்
ஆகாசத்தில் இருக்க
வீட்டுக்குள் மலர்கின்ற
வித்தியாசமான கொடி வகை.

- ஈரோடு பாரதி வித்யா பவன் 7-ஆம் வகுப்பு ஈ பிரிவு மாணவர் பா. சுபாஷ்

டைரக்ட் பண்றேன்னு முன் வரக் கூடாது. அது உங்களை நான் ஏமாற்றுவதாகும். நான் 'ஷைன்' பண்ண முடியாது என்று தெரிந்தும் ஈடுபடுவது எனக்கும் நல்ல தில்லை. அதனால தயவு செய்து மன்னிச்சுடுங்க.''

சிவாஜிக்கு ஏமாற்றம் ஏற்பட்டிருந்தால் அதை அவர் காண்பித்துக் கொள்ளவே யில்லை. ரொம்ப சகஜமாய்ப் பேசினார்.

''பரவால்லே, ஸ்ரீதர். இந்தக் கதையை விட்டுடுவோம். வேற கதைங்களா இல்லே. நல்ல கதையாய்த் தேர்ந்தெடுப்போம். நீயே டைரக்ட் பண்ணிக் கொடு'' என்றார்.

சிவாஜியின் பெருந்தன்மை அப்படிப் பட்டது. நான் மன நிம்மதியுடன் விடை பெற்றேன்.

**தே**ன் நிலவு, 'முழுக்க முழுக்க அவுட்டோரில் எடுக்கப்பட்ட புதுமையான படம்' என்றெல்லாம் விமர்சிக்கப்பட்டு, நல்ல பெயர் கிடைத்தாலும் கலெக்‌ஷனைப் பொறுத்தமட்டில் 'அமரதீபம்' போல், 'கல்யாணப் பரிசு' போல் சூப்பர் வெற்றி யல்ல என்ற விஷயம் என்னைப் பாதிக்க வில்லை. ''இன்னும் மூன்றே மாதங்களில் அடுத்த படத்துக்கான ஷூட்டிங் ஆரம் பித்துவிட வேண்டும்'' என்று பார்ட்னர் களிடம் சொன்னேன்.

''முதல் படமே எதிர் பார்த்த வெற்றி அடையாத போது, மூணு மாசத்துக்குள் அடுத்த படமா?'' - பார்ட்னர்கள் தயங்கத் தான் செய்தார்கள்.

''காலக்கெடு நிர்ணயத்துத்தான் செயல் படுகிறோம்; இந்த இரண்டாவது படத் திலும் ஏதாவது புதுமை செய்யத்தான் போகிறோம்'' என்றேன், அழுத்தமான குரலில்.

'புதுமையாக என்ன செய்வது?' யோசித்தேன். 'முதல் படம் முழுக்க முழுக்க அவுட்டோர். இரண்டாவது படத்தை முழுக்க முழுக்க இன்டோரில் எடுத்தால் என்ன?'

இந்த என் எண்ணத்துக்கு ஊக்கமளித் தது ஓர் ஆங்கிலப்படம். மிக்கி ரூனி நடித்த அந்தப்படம் முழுக்க முழுக்க ஒரு சிறைச் சாலைக்குள்ளேயே எடுக்கப்பட்டது. 'அப் படி நாமும் ஏன் பரிசோதனை செய்து பார்க்கக் கூடாது? ஒரே இடத்தில் கதை நடக்கிறது என்றால் அது எந்த இடம்? அதைச் சுற்றி கதை பின்ன முடியுமா? மக்கள் ஏற்பார்களா? வரவேற்புப் பெறுமா?

'அந்த இடம் பலரும் வந்து போகிற இடமாக, பல உணர்ச்சிகளுக்கும் சம்பவங் களுக்கும் வாய்ப்பளிக்கக் கூடிய இட மாக, மக்களின் அன்றாட வாழ்வில் ஒன்றுகிற இடமாக இருந்தால் ஏற்பார்கள். அப்படிப் பட்ட இடம்....?' சட்டென்று பொறி தட்டி யது - ''ஆஸ்பத்திரி!''

நிலைக்களன் தேர்வாகி விட்டது. அடுத்த சிந்தனை - கதை : ஒரு வயதானவர் சீரியஸான ஆபரேஷனுக்கு வந்து சேர் கிறார். உயிர் பிழைப்போமா என்ற கவலை... ஓர் இளம் பெண்ணும் ஆபரேஷ னுக்காக வந்து சேர்கிறாள். கல கல டைப். அனைவரையும் கவர்கிறாள். அந்தப் பெரி யவரிடம் பரிவும் பிரியமும் காட்டுகிறாள். தைரியம் சொல்கிறாள். ''நாம ரெண்டு பேருமே ஆபரேஷன் முடிந்து சந்தோஷ மாய் வீடு திரும்பப் போகிறோம்'' என்கிறாள்.

முதியவருக்கு முன்பாக முதலில் அந்தப் பொண்ணுக்குத்தான் ஆபரேஷன் நடக்கிறது. தியேட்டருக்குள் அழைத்துப் போகப்படும் கடைசி வினாடி வரை அவ ளிடம் கல கலப்புக் குறையவேயில்லை. அந்தக் கலகலப்பு திரும்பி வரவும் இல்லை! அவளுடைய உயிரற்ற உடல்தான் தியேட்டரிலிருந்து திரும்பி வருகிறது.

இதுதான் 'நெஞ்சில் ஓர் ஆலயத்தின் கதை. அந்தப் பெரியவர் வேடத்தில் சிவாஜி பிய்த்து உதறி விடுவார் என்பது என் கணிப்பு.

'கமான் ஸ்ரீதர்! நீங்கள் என்ன, எங்க ளுக்குக் காது குத்தப் பார்க்கிறீர்களா? இல்லை, ஞாபகப் பிசகாக வேறு ஏதோ கதையை 'நெஞ்சில் ஓர் ஆலய'த்தின் கதை என்று குழப்பிக் கொண்டிருக்கிறீர்களா? நாங்கள் தியேட்டரில் பார்த்த 'நெஞ்சில் ஓர் ஆலய'த்தின் கதை இது அல்லவே? சிவாஜி அதில் நடிக்கவே இல்லையே?' என்றெல்லாம் கல்கி வாசகர்கள் பலர் கேட்பது எனக்குப் புரிகிறது.

பிளீஸ் வெய்ட்! ஒரே வாரத்தில் புதி ருக்கு விடை கிடைத்து விடும்!

அடுத்த இதழ்...
பொங்கல் சிறப்பிதழ்



மனம் திறந்து
பேசுகிறார்!

## ரேவதி

- கிராம தேவதைகள்
  - பக்திக் கட்டுரை
- ஞாபக சக்தியைப் பெருக்குவது எப்படி...?
  - உங்கள் முன்னேற்றத்துக்கு

## ஃபாஷன் பக்கம்

- இளையதலைமுறைக்கான லேட்டஸ்ட் தகவல்கள்

# டான் கலிலியோ



பத்மா ரவிசங்கர் எழுதும்

புதுமையிலும் புதுமையான
மர்மத் தொடர்

அதிக பக்கங்கள் :
அதே விலை

வட்டமேஜை

# ஏழுதப்படாத டைரியிலும் எத்தனை விஷயங்கள்!

◆ எழுதப்படாதவரையில் டைரியில் எந்த சுவாரசியமும் இல்லை என்று எண்ணியிருந்த என்னை, டைரிகள் பற்றிய கட்டுரையில் வெளி விட்டிருந்த கருத்துக்கள் பிரமிக்க வைத்து விட்டன.
தூத்துக்குடி, என். சம்பத்.

## முரண்பாடு பாருங்கள்!

◆ டைரிகள் கட்டுரையில் - பெட்டிச் செய்தியில் வெளிவந்திருக்கும் சாமுயல் பெபிஸ் என்ற பெயர் பீப்ஸ் என்றிருக்க வேண்டும். ஆங்கில பாஷையில் ஸ்பெல்லிங்குக்கும் உச்சரிப்புக்குமிடையே நிலவும் முரண்பாட்டிற்கு இது ஓர் உதாரணம்!
சென்னை - 4, ஜி.எஸ். பாலகிருஷ்ணன்.

## 'தடா'வைப் புரிய வைத்தீர்கள்!

◆ எனக்குத் தடா சட்டம் என்றால் என்ன....? அதன் நோக்கங்கள் என்ன என்பது உங்கள் கட்டுரையைப் படிப்பதற்கு முன் சத்தியமாய்த் தெரியாமல்தான் இருந்தேன். இப்போது நன்றாகவே தெரிந்து கொண்டேன்.
புதுவண்டிப்பாளையம், த. ரவீந்திரன்.

## சிந்தனையைத் தூண்டியது!

◆ இந்தியா எப்படி இருக்க வேண்டும் என்று ராஜாஜி விரும்பினார் என்பதைத் தலையங்கத்தில் மிக அழகாக வெளியிட்டு, சிந்தனையைத் தூண்டிவிட்டிருக்கிறீர்கள்!
திருச்சி - 16,
ஜானகிமைந்தன் எல். ராஜகோபால்.

## பயனுள்ள யோசனை!

◆ இன்றைய இளைய தலைமுறை இசை ஞானம் பெற வேண்டுமானால் அலமு அக்காவிற்கு 'அம்மு' எழுதியுள்ள பயனுள்ள யோசனைகளைப் பெற்றோர்கள் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.
பெங்களூர், ப. மூர்த்தி.

## வெற்றி தொடரும்!

◆ 'ஜெ' வெற்றி பெறுவார், வெற்றி பெற்றுக் கொண்டே இருக்கிறார். உத்திரமேரூரில் கள், சாராயம் குடித்துவிட்டு, மயக்கமாக விவசாயிகள், தொழிலாளர்கள் சாலைகளில் விழுந்து கிடந்தார்கள். இப்பொழுது டீக்கடைகள் பெருகி, டீ சாப்பிடுகிறார்கள். பெண்டாட்டியை அடிப்பது, நகைகளை விற்பது என்பது நின்று விட்டது. பெண்கள் சைக்கிளில் பள்ளிக்கூடம் போகிறார்கள். பணம் மிஞ்சுவதால் சைக்கிள்கள் வாங்கியிருக்கிறார்கள். மொபெட் கூட சில பேர் வாங்கியிருக்கிறார்கள்.
உத்திரமேரூர், கே. ராமகிருஷ்ணன்.

## வேதனையான உண்மை!

◆ மதுரை அரசு மருத்துவமனையில் டார்ச் லைட் வெளிச்சத்தில் பிரசவ ஆபரேஷன் நடந்தது பற்றிய கேள்விக்கு, 'டார்ச் லைட்டாவது மருத்துவமனையில் இருந்ததே', என்று தராக ஆறுதலடைந்திருக்கிறார்! அது நோயாளியின் உறவினர்களால் கடையில் வாங்கி வரப்பட்டது என்பதே வேதனையான உண்மை!
த.அய்யன்கோட்டை, ஏ.எஸ். முத்து.

## மனிதாபிமானம் வேண்டும்!

◆ விசாரணைக்காகச் சிறைச்சாலைகளில் இருந்து நீதி மன்றங்களுக்கு அழைத்து வரப்படும் கைதிகளின் நிலை பரிதாபமானது. கைகளில் விலங்கிட்டுக் காட்சிப் பொருளாகச் சாலையில் அழைத்துச் செல்கின்றனர். கைதிகளும் மனிதர்கள்தானே? விலங்கு போடப்பட்ட கைதிகளை வீதியில் அழைத்துச் செல்லாமல் காவல் துறை வாகனத்தில் ஏற்றிச் செல்லலாமே! அரசு மனிதாபிமானத்துடன் இதைப் பரிசீலிக்க வேண்டும்.
தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி.

## நெஞ்சை அள்ளியது!

◆ ''தடுக்கும் திறமிலேன்'' சிறுகதை பளிச்சிட்டது. நெல்லைத் தமிழ் நெஞ்சை அள்ளியது. ஒருவன் எத்துணை வல்லுநன் ஆயினும் அவனுக்கு ஒழுக்கமும், கட்டுப்பாடும் அவசியம் என்பதையும், அவற்றால் அவன் திறமை மேலும் பிரகாசிக்கும் என்பதையும் நயம்படக் கட்டிக் காட்டியது.
முசிறி, முக.இ.க. பாலசுப்பிரமணியன்.

## ஓர் ஆறுதல்!

◆ 'யானை மீது வந்த அரச குமாரன்' சிறுகதை ரசமாக இருந்தது. நகைச்சுவை அரிதாகி விட்ட நிலையில், நகைச்சுவைச் சிறுகதைகளைக் கல்கி தொடர்ந்து வெளியிடுவது ஆறுதலான விஷயம்.
திருச்சி, தாயு. செந்தில் குமார்.

## இதுவும் காரணம்!

◆ ரிசர்வ் வங்கியில் காப்பு நிதி, மற்றும் அரசு கடன் பத்திரங்களில் முதலீடு போக, மிஞ்சிய தொகையை வங்கிகள் மிகுந்த லாபத்திற்குக் கடனாக அளிக்கின்றன எனச் சொல்ல முடியாது. அதிலும் முன்னுரிமைக் கடன்கள் (PRIORITY SECTOR LENDING) என அறியப்படும் அரசாங்கத் திட்டப்படியான கடன்களுக்கு மிகக் குறைந்த வட்டியில் (4 சதத்திலிருந்து 13 சதம்) கடன் வழங்குகின்றன வங்கிகள். அவற்றின் லாபம் வெகுவாகக் குறைய இதுவும்தான் காரணம்.
தக்கலை, லீலா இராம்.

# பொங்கிய சிரிப்பு!

சென்ற ஆண்டு பொங்கலன்று எங்கள் ஊரில் (புதிதாகக் காங்கிரசில் சேர்ந்த) ஒரு நிலச்சுவான்தார் தம்முடைய ஒரு டஜன் காளைகளுக்கும் கொம்பு சீவி, காங்கிரஸ் கொடி போல் சிவப்பு, வெள்ளை, பச்சை பெயிண்டு அடிக்கச் செய்து உலாவ விட்டார். இது தி. மு. க.,




அ. இ. அ. தி. மு. க. கட்சியினரை உசுப்பி விட்டது. அவர்களிடம் கால்நடைச் செல்வம் அதிகமில்லை. எனவே கறுப்பு, சிவப்பு, வெள்ளை வண்ணக் கலவைகளை வாங்கி, ஊரிலிருந்த மாடுகளுக்கெல்லாம் இனாமாகவே அடித்து, தங்கள் மெஜாரிட்டியை நிலைநாட்டினர். டெபாசிட் தேறுமளவுக்கு ஜனதாதள, வன்னியர் சங்கச் சின்னங்களும் சில மாடுகளை அலங்கரித்தன. மாலை கட்டை வண்டி ரேசுக்காக யாவும் பொது மைதானத்தில் வந்து குழுமின. அந்த இடமே ஒரு சர்வ கட்சி சமரச மாநாடு போல் காட்சி அளித்தது. அப்பொழுது பண்ணையாரின் இரண்டு (காங்கிரஸ்) மாடுகள் ஒன்றையொன்று தாக்கிக் குத்திக் கிழிப்பதைப் போல் மோதிக் கொண்டன. உடனே ஒருவர், ''எல்லாக் கட்சிகளும் ஒன்றுபட்டாலும் இந்த வாழப்பாடி, மூப்பனார் கோஷ்டி மோதலை மட்டும் தவிர்க்கவே முடியாது போல் இருக்கிறதே!'' என்றதும் பலத்த சிரிப்பு!

- அ. ஷண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன்நகைப் பரிசு பெறுபவர் :

அ. ஷண்முகசுந்தரம்,
37, நேரு தெரு,
சிட்லபாக்கம், சென்னை - 64.

## சுண்ணாம்புச்சாமி

வாசலில் அழகிய வண்ணக் கோலமிட்டு, அடுப்பு வைத்து, பொங்கல் பொங்குவது வழக்கம். அவ்வாறு என் மனைவி கோலமிடும் பொழுது ரோஸ் நிற வண்ணம் பெற வேண்டிச் சுண்ணாம்புக் குழம்பில் மஞ்சள் தூளைக் கலந்து கொண்டிருந்தாள். அப்போது அருகில் வந்த ஏழு வயது மகனுக்கு இந்த நிற மாற்ற நிகழ்ச்சி அதிசயமாகப்பட்டது. விளக்கம் கேட்டு நச்சரிக்க ஆரம்பிக்க, தொல்லை தாங்காத அவன் அம்மாவும், ''நம்ம வீட்டுப் பொங்கலுக்குச் சுண்ணாம்புச்சாமி வந்துருச்சு...! அந்த சாமியோட மகிமையில்தான் இந்த கலர் வந்துருச்சு!'' என்று கூறிச் சமாளித்து அனுப்பி விட்டாள். சிறிது நேரத்தில் என் வீட்டுக்குப் பெருங் கூட்டமே திரண்டு வந்தது! என்ன'என்று விசாரிக்கையில்தான் என் மகன் ''சுண்ணாம்புச்சாமி'' மகிமையை ஊர் பூராவும் பரப்பிய சங்கதி புரிந்தது!

உண்மை நிலையை விளக்கவும், வந்த



# ஈரோடு : டல்லடிக்காத சில புள்ளி விவரங்கள்!

ஈரோடு என்று எப்படிப் பெயர் வந்தது தெரியுமா? பிரம்மாவின் ஐந்தாவது தலையைச் சிவபெருமான் கிள்ளி எறிந்த போது, அந்தத் தலையின் ஒரு பகுதி ஈரத்தோடு வந்து விழுந்ததால், 'ஈரமான (மண்டை) ஓடு' நாளடைவில் ஈரோடு ஆனதாகச் சொல்லப்படுகிறது.

1871-ஆம் ஆண்டு ஈரோடு நகராட்சியாக்கப்பட்டது. அப்போது மக்கள் தொகை 10,201. இப்போது 1,59,107. இந் நகரின் வீதிகளுக்கு 1945-ம் ஆண்டில்தான் மின்சாரம் வழங்கப்பட்டது. நகராட்சியின் வருமானம் ஆண்டொன்றுக்கு 4.71 கோடி என்றால் மற்ற நகராட்சியினர் பொறாமைப்படுவார்கள்! 8.44 சதுர கி.மீ. பரப்பளவைக் கொண்ட இந் நகரம், பொருளாதார ரீதியில் ஒப்பிட்டால் தமிழ்நாட்டில் மூன்றாவது இடத்திலும் அனைத்திந்திய அளவில் 360-வது இடத்திலும் இருக்கிறது.

நகர வளர்ச்சி என்று எடுத்துக் கொண்டால், தமிழகத்தில் இரண்டாவது நகராகவும் அனைத்திந்திய அளவில் ஐந்தாவது நகராகவும் இருக்கிறது.

இங்குள்ள மக்கள் ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு நகராட்சி வழங்கும் குடிநீரின் அளவு 88 லிட்டர். ஈரோடு நகர வாசிகள் வைத்திருக்கும் இரு சக்கர வாகனங்களின் எண்ணிக்கை மட்டும் 53,376. (சைக்கிள்கள் தனி). இந்த ஆண்டு நகருக்குள்ளும் மாவட்டம் முழுமையிலும் நடந்த (கடந்த அக்டோபர் வரையிலான) சாலை விபத்துக்களின் எண்ணிக்கை 973. அதில் இறந்தோரின் எண்ணிக்கை 247.

கூட்டத்திற்கும், எங்களுக்கும் பொங்கிய சிரிப்பு அடங்க நீண்ட நேரமாயிற்று.

- கா. ச. சம்பத்,
சுப்பிரமணியக் கவுண்டன் வலசு.

## வள்ளுவருக்கு முத்தம்!

சென்ற ஆண்டு பொங்கல் விடுமுறையின் போது என் ஐந்து வயது மகன் அருண், தன் புத்தகத்திலிருந்த திருவள்ளுவர் படத்துக்கு முத்தம் கொடுத்துக் கொண்டிருந்தான். காரணம் கேட்ட போது, "அவர் தானே கரெக்டா மாட்டுப் பொங்கலுக்கு அடுத்த நாள் பிறந்தார். அதனால்தானே எங்களுக்குத் தொடர்ச்சியா நாலு நாள் லீவு கிடைக்குது" என்று பதில் வந்தது!

- ஜி. எஸ். சுப்பிரமணியன்,
சென்னை - 113.

## மாட்டுக்குப் பிடிக்குமே!

எங்கள் வீட்டில் மாடுகள் இருந்ததால் மாட்டுப் பொங்கலன்றுதான் பொங்கல் வைப்போம். பொங்கல் பானையை அடுப்பில் வைத்து, அதில் வெல்லம், அரிசி என்று ஆளுக்குக் கொஞ்சம் போடுவோம். அப்போது திடீர் என்று ஓடிவந்த என் அண்ணாவின் குழந்தை தேவி, பொங்கல் பானைக்குள் எதையோ போட்டாள்! "அடடா! உள்ளே என்னடீ போட்டே?" என்று கேட்க, அவள், "புண்ணாக்கும் அருகம்புல்லும்தான் போட்டேன்...! மாட்டுக்குப் பிடிக்குமேன்னுதான்" என்றாள்! சிரித்ததோடு, சிந்தனையிலும் ஆழ்ந்தோம்!

- எஸ். பொன்னுசாமி, கோவை - 11.

## ரொம்பப் பிடித்தது!

அத்தை எல்லோருக்கும் பொங்கல் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார். பொங்கலில் அடி பிடித்துப் போன வாசனை வந்தது. அத்தை, "பொங்கல் எப்படி இருக்கு?" என்று கேட்க, நாங்கள் எல்லோரும் ஆளுக்கொன்று கூறி மழுப்ப, குறும்புக்காரத் தம்பி மட்டும், "பொங்கல் ரொம்பப் பிடித்திருக்கிறது" என்று கூறினான். அத்தை மகிழ்ந்து போய் "இன்னும் போடவா?" என்று கேட்க, தம்பி பாத்திரத்துடன் ரொம்பப் பிடித்திருப்பதாகக் கூறினான்! அத்தை கோபத்தை மறந்து சிரிக்க நாங்களும் அதில் கலந்து கொண்டோம்.

- ஹேமா, மதுரை.




கல்கி

# ஆளுக்கொரு வாகனம்; வீதியிலே நெரிசல்!

''இதோடு ஜவுளிச் சந்தை நகருக்குள் இருப்பதால் பிரச்னை. இதை நகருக்கு வெளியே தனியாகக் கொண்டு சென்று விட்டால் இன்னும் நெரிசல் குறைந்து விடும்'' என்கிறார் அரங்கராசன்.

''கேபிள் சிஸ்டம் ஒரு நல்ல யோசனை'' என்கிறார் நகராட்சி ஆணையாளர் கோபால்சாமி. ''அதற்கான வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. உலக



அரங்கராசன்



மாணிக்கம்

சென்னையில் ஆயிரம் விளக்குப் பகுதியில் 'பீக் அவர் டிராஃபிக்'கை அனுபவித்தவர்களுக்கு ஈரோடு சாலைகள் ஈ ஓட்டுவதாகத் தோன்றலாம். ஆ ன ா ல் ஈரோடு மக்களுக்கு பயங்கர நெரிசலாகவே தோன்றுகிறது.

''என்ன செய்வது? இங்குள்ள மக்கள் தொகையையும் இங்குள்ள வாகனங்களையும் கணக்கெடுத்துப் பார்த்தால், ஏறத்தாழ ஆளுக்கொரு வாகனம் இருக்கிறது. இந்த நிலையில் நெரிசலை எப்படிக் குறைக்க முடியும்?'' என்கிறார் மாவட்ட காவல் துறை கண்காணிப்பாளர் காந்திராஜன்.

வங்கி அதற்காக ஆறு கோடி ரூபாய் தருவதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறது'' என்கிறார் ஈரோடு நகர எம்.எல்.ஏ. (ஆளுங்கட்சி தான்!) மாணிக்கம். ''இது மட்டுமல்ல, கொல்லம்பாளையத்திலிருக்கும் குறுகிய ரயில்வே பாலத்தை மேம்படுத்தவும் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. அதன் மூலமும் நெரிசல் குறையும் என்கிறார்!'' எம்.எல்.ஏ.



கோபால்சாமி



காந்திராஜன்

''ஒரு வழி இருக்கிறது'' என்கிறார் நகராட்சியின் முன்னாள் சேர்மன் அரங்கராசன். ''நகர வீதிகள் மிகவும் குறுகலானவை. ஓரங்களில் நடப்பட்டிருக்கும் மின்சாரக் கம்பங்களால் வீதிகள் இன்னும் குறுகலாகின்றன. இந்த மின்கம்பங்களை ஒழித்து விட்டு, கேபிள் சிஸ்டத்தைக் கொண்டு வந்தாலே பாதி நெரிசல் குறையும்.

ஈரோட்டில் உயிரோடிருப்பவர்களுக்குத்தான் இந்த நெரிசல் பிரச்னை என்பதில்லை. செத்த பிறகு இடுகாட்டுக்குச் சென்றாலும் நெரிசல் பிரச்னைதான். காரணம், அவரவரும் தங்களிஷ்டத்திற்குச் சமாதிகளாகக் கட்டித் தள்ளி விட்டதால், புதியவர்களுக்கு அங்கே இடநெரிசல்!

''முன்பு சமாதி கட்டுவதற்கு நகராட்சி அனுமதி வழங்கியது உண்மைதான். இட நெருக்கடி காரணமாக இப்போது வழங்கப்படுவதில்லை. என்றாலும் சிலர் கட்டி விடுகிறார்கள். இதுவோர் உணர்வு பூர்வமான பிரச்னை என்பதால் சமாதிகளைத் திடுதிப்பென்று இடித்துத் தள்ளிவிட முடியாத நிலையிலிருக்கிறது நகராட்சி!'' என்கிறார் ஆணையர் கோபால்சாமி.

---

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka